விலை: $1-00.

அவளுடைய 'உடலை' சட்டுப் பொசுக்கியது காமக் கனல்.
அதை 'அணைக்க' வந்தவன் ஒரு பள்ளி மாணவன்!

# மல்லிகா

மெ. அறிவானந்தம்



அறிவகம்

கோலக்கிள்ளான்



# அறிமுகம்

பழைய கருத்து, புதிய மெருகு, குறள் உவமை-இவ்வமிசிரம் மல்லிகாவைப் படைத்துள்ளார், இளம் எழுத்தாளர் மெ. அறிவானந்தம்.

விமானம் ஓட்டக் கற்றுக்கொள்பவரும் முதலில் பயிற்சி விமானத்தைத் தானே கையாளுகின்றனர்? .......அதுபோல, அடிப்படை மனித உணர்ச்சிகளான காதல்-காமம்-கொள்கை இவைகளையே மணிகளாகக் கொண்டு மல்லிகாவை ஒரு புது அணிகலனாகச் சித்தரித்துள்ளார் தோழர்.

மலாயாவில் தமிழ் எழுத்தாளர்களின் எண்ணிக்கை பெருக வேண்டுமென விழையும் தமிழ்ப்பெருமக்கள், இதுபோன்ற முயற்சிகளை வரவேற்க வேண்டும்.

நீரில் இறங்காமல் நீச்சல் கற்றுக்கொள்ளமுடியாதல்லவா? அதுபோலவே, இளம் எழுத்தாளர்களுக்கு தீவிர முயற்சியே திருவினையாக்கும்.

கோலாலம்பூர்
25-12-1957

கே. ஸி. அருண்
(ஆசிரியர், ''தமிழ் நேசன்'')

# வாழ்த்துகிறேன்

மாணவர் மணி மன்ற அங்கத்தினரான திரு. மெ. அறிவானந்தம், 'மல்லிகா' என்ற பெயரில் தாம் எழுதிய நாவலை புத்தகமாக அச்சிடும் முயற்சியைப் பாராட்டுகிறேன். இந்த நாவலின் தன்மையை நான் அறிவேன். மன்ற அங்கத்தினர் ஒருவர் நாவல் எழுதி தாமே அச்சிடும் துணிவுபெற்றது மன்றத்திற்குப் பெருமை அளிப்பதாகும். திரு. அறிவானந்தம் முயற்சி ஆக்கம் பெற வாழ்த்துகிறேன்.

சிங்கப்பூர்
14-9-57

கோ. சாரங்கபாணி



# என்னுரை

**மல்லிகா !** வாழ முடியாதவளா? அல்லது வாழத் தெரியாதவளா? என்பதை நான் இன்றும் சிந்தித்து வருகிறேன். அவளுடைய அவல வாழ்விற்கு காரணமென்ன? அறிவாளிகளின் கூற்றுப்படி 'சந்தர்ப்பமும் சூழ்நிலையும்' அவளுடைய வாழ்வை கூறு போட்டுக் கொண்டனவா அல்லது கையாலாகாதவர்கள் சொல்வார்களே 'விதி' என்று, அந்த விதி செய்த சதியின் விளைவு தான் அவளுக்கு இந்த கதியா? உங்கள் சிந்தனைக்கே விட்டுவிடுகிறேன்.

கண்ணன் போன்ற இளைஞர்களும் இந்த உலகில் வாழத்தான் செய்கிறார்கள். அவர்களுடைய அந்தக் கேடுகெட்ட வாழ்வை குத்திக்காட்டி கேலி செய்வதல்ல எனது நோக்கம். அவர்கள் தங்களை உணர்ந்து கொள்ள வேண்டும். கண்ணனின் முடிவே அவர்களுக்கும் ஏற்பட்டு விடக் கூடாது என்பதே எனது ஆசை.

எழிலும் மாதவியும் காதலை புரிந்து கொண்டவர்கள்.

''கற்புநிலை என்று சொல்ல வந்தால் இரு
கட்சிக்கும் அஃது பொதுவில்வைப்போம்''

என்ற அமரகவியின் கவிதையை நன்கு உணர்ந்தவர்கள். இந்நாளில் நடமாடும் வெறும் 'போலி'க் காதலர்களைப் போல் காற்றடித்த திசையெல்லாம் திரும்பும் காதல் மனம் படைத்தவர்களல்ல. காதலையும் கடமையையும் உணர்ந்து கொண்ட உத்தமர்கள்.

இளங்கோவனைப் பற்றி நான் அதிகம் ஒன்றும் எழுதப் போவதில்லை. அவன் எத்தகையவன் என்பதை நீங்களே தெரிந்து கொள்ளுங்கள்.

எனது பிஞ்சு உள்ளத்தில் உருவான எண்ணங்களை எடுத்துச் சொல்ல எனக்குள்ள உரிமையை உணர்ந்தே இந் நூலை எழுதினேன்–உங்களுடைய ஆதரவு கிடைக்கும் என்ற நம்பிக்கையில், மல்லிகா நூல் வடிவில் உங்கள் முன் படைக்க சுமார் ஓர் ஆண்டு காலமாக நான் எடுத்துக்கொண்ட முயற்சி இமயம் நிகர்.

'மல்லிகா'வுடன் பழகிய பின் அவளுக்காக நீங்கள் உண்மையிலேயே கவலைப்படுவீர்களானால் அவளுக்காக இரண்டு சொட்டு கண்ணீரை சிந்துவதோடு நின்றுவிடாமல், அவளுடைய வாழ்வின் மேடு பள்ளங்களை நடு நிலையில் நின்று ஆராய்ந்து பின் அவளைப் போன்ற மல்லிகைகள் இவ் வையத்தில் கருகிப் போகாமல் இருக்க, சந்தர்ப்பம் என்னும் சூறுவளியில் சிக்கி சிதைந்து போகாமல் இருக்க–சூழ்நிலை என்னும் நச்சுக் கிருமிகளால் தாக்கப்பட்டு தரையில் உதிர்ந்து காலமென்னும் பெரு வெள்ளத்தில் அடித்துக் கொண்டு போகாமல் இருக்க, நாம் என்ன செய்ய வேண்டும் என்பதை எண்ணிப் பார்க்கும்படி தாழ்மையுடன் விழைகின்றேன். வணக்கம்.

எளியேன் முயற்சிக்கு ஆசிச் செய்தி அளித்த கோலாலம்பூர் 'தமிழ் நேசன்' தினத்தாள் நிர்வாக ஆசிரியர் திருவாளர் கே. ஸி. அருண் அவர்களுக்கும், வாழ்த்துரை நல்கிய சிங்கைத் 'தமிழ் முரசு' ஆசிரியர் திரு. கோ. சாரங்கபாணி அவர்களுக்கும், எனது நன்றி உரித்தாகுக.

போர்ட் சுவெட்டன்ஹாம்
31–12–1957

அன்பன்
மெ. அறிவானந்தம்




# அத்தியாயங்கள்

# காணிக்கை

நான் வணங்கும் தெய்வங்களாகிய எனதருமை பெற்ருேர்களுக்கு.




ஒழுக்கமும் வாய்மையு நாணுமிம் மூன்று
மிழுக்கார் குடிப்பிறந் தார். —குறள்.

# 1. இரவில் வந்தவள்

இருளிலே புதைந்து கிடந்தது அந்த நகரம். மங்கலான ஒளியின் மூலம் அந்த நகரத்து வீதிகளை அலங்கரித்தபடி ஆடாமல் அசையாமல் நின்றுகொண்டிருந்தன சாலையோரத்து விளக்குக் கம்பங்கள். நடப்பார் யாருமின்றி நாதியற்றுக் கிடந்த அந்த வீதிகளில் நிர்மலமான அமைதி குடிகொண்டிருந்தது. அதுவும் நீண்ட நேரம் நீடிக்கவில்லை. இரவின் அமைதியை கிழித்துக் கொண்டு யாரோ ஓடிவரும் ஒலி அந்தத் தெருவின் சந்து முனைகளில் மோதி எதிரொலித்தது. உயிரைக் கையில் பிடித்தவாறு ஓடிவந்துகொண்டிருந்த அது........ஒரு பெண்! ஆம், பெண். அவள் பூக்காட்டில் நுழைந்து வரும் தென்றலாக அல்ல, புயலாக வந்துகொண்டிருந்தாள். அவளை விரட்டியவாறு சில காலிகள்— அந்தக்காட்சி வெங்கொடுமை சாக்காட்டுக்குப் பயந்து வேகமாக ஓடும் புள்ளிமானை வெஞ்சின வேங்கைகள் வெறிகொண்டு துரத்துவதைப் போல் இருந்தது.

ஓடிக்கொண்டிருந்த அவளுடைய இருதயம் வேகமாக அடித்துக் கொண்டது. அவளுடைய கால்கள் ஒன்றோடொன்று பின்னின. அவளுடைய நடுங்கும் உடலில் வேர்வைத்துளிகள் முத்து முத்தாக தேங்கி நின்றன. அவள் ஓடினாள்—அவர்கள் தொடர்ந்தனர். அவள் ஏக்கத்துடன் ஒவ்வொரு வீட்டையும் ஏறிட்டு நோக்கினாள், சாத்திக்கிடந்த எல்லா வீட்டின் கதவுகளும் அவளை ஏளனத்துடன் பார்த்துச் சிரித்தன. அவள் பீதியுடன் திரும்பிப் பார்த்தாள். அவர்கள்—அந்த முரடர்கள் அவளை நெருங்கி வந்துகொண்டிருந்தார்கள்.

ஓடிக்கொண்டிருந்த அவள் ஒரு சந்தில் புகுந்து தொடர்ந்து ஓடினாள். அவர்களும் தொடர்ந்து துரத்தினார்கள். மானென ஓடிய

அவள் மகிழ்வுடன் நின்ருள். அங்கே—ஒரு வீட்டின் கதவு சிறிது திறந்திருந்தது. அவள் தயங்கவில்லை. ஒரே பாய்ச்சலில் அந்த வீட்டினுள் புகுந்து கதவை சாத்தி தாழிட்டாள். சிறிது நடுக்கம் தெளிந்தவாறு கதவின் மேல் சாய்ந்த அவள் அடிவயிற்றிலிருந்து ஒரு ஆழமான பெருமூச்சு வெளிப்பட்டது. தன் கண்ணோட்டத்தை அந்த அறையில் வீசினுள். அங்கே—

மேசையில் அமர்ந்தவாறு வேகமாக எதையோ எழுதிக்கொண்டிருந்தான் ஒரு இளைஞன். அவளுடைய இதயம் வேகமாக அடித்துக்கொண்டது. வேடனுக்குத் தப்பி பருந்தினிடம் சிக்கிய கதையாக முடிந்துவிடுமோ என்று அஞ்சியவாறு மருண்ட விழிகளால் அவனையே 'பரக்கப் பரக்க' பார்த்துக்கொண்டிருந்தாள்.

அவன் மெல்ல சிரித்தவாறு அவளை நோக்கினுன். அவள் ஆடாமல் அசையாமல் நின்றுகொண்டிருந்தாள். அவளை துரத்தி வந்தவர்கள் அந்த வீட்டைத் தாண்டி வேகமாக ஓடுவதை அவள் உற்றுக் கேட்டாள். அந்த முரடர்களின் காலடி ஓசை மெல்ல மெல்ல தேய்ந்து மறைந்தது.

அவன் அவளைப்பார்த்து ஏதோ கேட்க வாயைத் திறந்தான் அவள் 'உஸ்' என்று விரலை வாயில் வைத்து பேசவேண்டாம் என்று சைகை செய்தாள். அவன் ஒன்றும் புரியாமல் விழித்தான். "அய்யா, என்னைக் காப்பாற்றுங்கள். என் கற்பை களவாட கயவர் சிலர் துரத்தி வருகிருர்கள்" என்ருள் மெல்லிய குரலில்.

அவன் அவளை பரிதாபத்துடன் பார்த்தான். அவனுடைய கண்களில் வீசிய அறிவொளி அவளுக்கு ஆறுதலாக இருந்தது. "வா, இப்படி வந்து உட்கார். அவர்கள் இனி உன்னை ஒன்றும் செய்துவிடமுடியாது," என்ருன் அன்புடன். அவள் அவனுடைய அமைதி நிறைந்த முகத்தைப் பார்த்தவாறு அவனுக்கருகில்போய் அமர்ந்தாள். கூஜாவிலிருந்த தண்ணீரை கோப்பையில் நிரப்பி அவளிடம் நீட்டினுன். அவள் அதை வாங்கி பருகிவிட்டு நன்றியறிதலுடன் அவனை நோக்கினுள்.

"யாரம்மா, நீ?" என்ருன் அவன். "நான்.........நான்...... என் பெயர் மாதவி. பெண்கள் உயர்நிலைப் பள்ளியில் பயிலுகிறேன். இன்று எங்கள் பள்ளியின் வருடாந்திர விழாவில் கலந்துகொண்டு வீடு திரும்பும்போது சில காலிகள் என்னை வழி மறித்து........." அவளால் அதற்குமேல் சொல்ல முடியவில்லை.

துயரம் தாங்காமல் விம்மினாள். அவனுக்கு அவளைப் பார்க்க பரிதாபமாக இருந்தது. "மாதவி அழாதே,......மனதை தேற்றிக் கொள்," என்றான் அவளைப் பார்த்து. அவள் எவ்வளவு நேரம் தான் அப்படி விம்மிக்கொண்டிருந்தாளோ அவளுக்கே தெரியாது. நிமிர்ந்து பார்க்கும் போது அவன் தீவிரமாக எழுதுகோலை ஏட்டில் ஓட்டிக்கொண்டிருந்தான். அவள் அவனையே பார்த்துக் கொண்டிருந்தாள். அவன் அவளை ஏறிட்டு நோக்கி பேனாவை மேசையின்மேல் வைத்துவிட்டு கைகளைப் பிசைந்தவாறு "மாதவி, நீ இப்பொழுது உன் வீட்டிற்குப் போகமுடியாது. அந்த முரடர்கள் உன்னை மீண்டும் கண்டுவிட்டால் பிறகு நீ தப்பவே முடியாது. ஆகையால் இன்று இங்கேயே இரவைக் கழித்துவிட்டு நாளைக்கு உன் வீட்டுக்குப் போகலாம். போ! அதோ அந்த அறையில் போய் படுத்துக் கொள்."

"இங்கேயே படுத்துக் கொள்வதா?" என்றாள் மாதவி பயத்துடன். "ஏன், இது என்ன புலியின் குகையா......?" என்றான் அவன் கேலியுடன். "இல்லை......வந்து......வந்து......," என்று தயங்கினாள் மாதவி. அவன் அவளைக் குறும்பாகப் பார்த்தவாறு, "வேண்டுமானால் கதவை தாழிட்டுக்கொள்," என்றான். அவள் அதற்குமேல் அங்கே இருக்க முடியாமல் மெல்ல அந்த அறையினுள் நுழைந்தாள். அது ஒரு சிறிய அறை. ஒரே ஒரு கட்டில் தான் அங்கு போடப்பட்டிருந்தது. அந்த அறையின் சுவற்றில் சிந்தனைவாதிகளின் திரு உருவப் படங்கள் மாட்டப்பட்டிருந்தன. அவள் அந்தப் படங்களை ஏறிட்டு நோக்கினாள் —அடிமைத் தளையை அறுத்த ஆப்பிரஹாம் லிங்கன்—பொது உடமைத் தந்தை லெனின் ஆகியோரின் படங்களுடன் பலநாட்டு அமர கவிகளின் படங்களும் மாட்டப்பட்டிருந்தன. ஒரு சிறிய மேசையில் தடி ஊன்றியபடி காந்தி அடிகளின் சிலையும்—அன்பே வடிவான புத்தரும்—அறிவுச் சுடர் வீசும் முகமுடைய ஒரு குள்ள மனிதரின் (சாக்ரடீஸ்) சிலையும் வரிசையாக இருந்தன.

மாதவிக்கு அந்த அறையினுள் உலகமே அடங்கியிருப்பது போல் தோன்றியது. மெல்ல படுக்கையில் வந்து அமர்ந்தாள். தூக்கம் கண்களை சுழற்றியது. மங்கலாக எரிந்துகொண்டிருந்த படுக்கை அறை விளக்கை அணைக்கப் பக்கத்திலிருந்த மேசையை நெருங்கினாள். அங்கே! சிரித்த முகத்துடன் அவனுடைய படம் வைக்கப்பட்டிருந்தது. அவள் ஒருமுறை வாசலைப் பார்த்துவிட்டு

அந்தப் படத்தை மெல்ல தன்னுடைய கைகளில் எடுத்தாள். அவள் உடல் புல்லரித்தது. அவளுக்கு அந்தப் படத்தையே பார்த்துக்கொண்டிருக்க வேண்டுமென்று தோன்றியது. அந்தப் படத்தை தனக்குத் தெரியும்படி திருப்பி வைத்துவிட்டு கட்டிலில் வந்து படுத்துக் கொண்டாள்.

எவ்வளவு நேரம்தான் அந்தப் படத்தையே பார்த்துக் கொண்டிருந்தாளோ அது அவளுக்கே தெரியாது. திடீரென்று ஏதோ விழும் ஓசை கேட்டுத் திடுக்கிட்டு எழுந்தாள். அங்கே—இருள் கப்பிக் கிடந்த அந்த அறையின் ஒரு மூலையில் பச்சை இரத்தம் பாய்ந்து பளபளக்கும் இரண்டு முரட்டுக் கண்கள் அவளையே பார்த்துக்கொண்டிருப்பதை பார்த்ததும் அவளுக்கு சப்தநாடிகளே ஒடுங்கிவிட்டது. "ஆ!" வென்று வாய்விட்டு அலறிவிட்டாள். அவன் சப்தம் கேட்டு அங்கே ஓடிவந்தான். அவள் பயத்துடன் ஓடிப்போய் அவனை சேர்த்துக் கட்டிக் கொண்டாள். அவளுடைய உடல் வேகமாக நடுங்கியது. வாய் குளற "அவர்கள், அவர்கள்.........அந்த முரடர்கள்.........," என்ருள். "நீ ரொம்பவும் பயந்து இருக்கிருய், அதனுல்தான்.......," என்று அவன் வார்த்தைகளை முடிக்கு முன், "இல்லை.......இல்லை......... அதோ பாருங்கள் அந்த மூலையில்," என்ருள். அவன் அங்கே சட்டென்று திரும்பிப் பார்த்தான். அங்கே—அந்த அனல் கக்கும் கண்கள் அவர்களையே பார்த்துக்கொண்டிருந்தன. அதைப்பார்த்த அவன் வாய்விட்டு சிரித்துவிட்டான். அவளுக்கு ஒன்றுமே புரிய வில்லை. "ஏன் சிரிக்கிறீர்கள்?" என்ருள். அவன் அவளுடைய முகத்தைப் பார்த்தவாறு, "நீ கோழை! அதோ பார்" என்று விளக்கைப் போட்டுக் காட்டினுன். அங்கே—கொட்டக் கொட்ட முழித்துக்கொண்டு நின்றது ஒரு கருப்புப் பூனை.

மாதவியின் முகம் நாணத்தால் சிவந்துவிட்டது. அப்போது தான் அவள் அவனுடைய அகன்ற மார்பில் சாய்ந்துகொண்டிருப் பதை உணர்ந்து சட்டென்று விலகிக் கொண்டாள். அவன் மீண்டும் 'கலகல' வென்று சிரித்தான். "மாதவி, தைரியமாகப் படுத் துத் தூங்கு, இங்கு யாரும் வரமாட்டார்கள்," என்ருன். "எனக்கு பயமாக இருக்கிறது. நீங்களும் படுத்துக் கொள்ளுங்களேன்," என்ருள் கள்ள எண்ணமற்ற அந்தக் கன்னி. "சரி," என்று அவன் ஒரு பாயை தரையில் விரித்து படுத்துக்கொள்ளப் போனுன். "தரையிலா படுத்துக்கொள்ளப் போகிறீர்கள்! வேண்டாம் நீங்

கள் இங்கே கட்டிலில் படுத்துக்கொள்ளுங்கள்'' நான் தரையில் படுத்துக்கொள்கிறேன் என்றாள். ''இல்லை நீயே மெத்தையில் படுத்துக்கொள். உன்னைப் பார்த்தால் பெரிய இடத்துப் பெண் ணைப்போல் தெரிகிறது உனக்கு இந்தத் தரை தோதுப்பட்டு வராது,'' என்றான் அவன் வாஞ்சையுடன்.

அவள் அவனையே பார்த்தபடி படுத்துக்கொண்டிருந்தாள். அவன் முகட்டுவளையை பார்த்தபடி ஆழ்ந்த சிந்தனையில் மூழ்கி இருந்தான். ''இந்த வீட்டில் எத்தனைபேர்கள் இருக்கிறார்கள்,'' என்றாள் அவள் ஆவலுடன்.

''இரண்டுபேர்கள்''

''யார் யார்''

''ஒரு ஆணும் பெண்ணும்''

''யார் அந்தப் பெண்?''

''நீதான்''

'களுக்' கென்று சிரித்து விட்டாள் மாதவி. அவனும் அவ ளுடன் சேர்ந்து சிரித்தான். ''உங்கள் மனைவி பிறந்தகம் போயிருக் கிறாளா?'' அவள் மீண்டும் தொடர்ந்தாள். ''ஆமாம்,'' என்று அவன் தலையை ஆட்டினான்.

''உங்களுக்கு எத்தனை குழந்தைகள்?''

''ஏழு''

''பொய்!'' என்று கத்திவிட்டாள் அவள். அவசரப்பட்டு விட்டதை நினைத்து உதட்டைக் கடித்துக்கொண்டாள். ''உங்கள் மனைவியின் படத்தை நான் பார்க்கலாமா?'' ''ஓ! பார்க்கலாம். எனக்குத் திருமணம் ஆனபின்''.

''என்ன? உங்களுக்குத் திருமணம் ஆகவில்லையா? அப்படி யானால் ஏழு குழந்தைகள்........,'' என்று இழுத்தாள்.

''நீதானே கேட்டாய் மனைவி பிறந்தகம் போயிருக்கிறாளா? என்று'' மாதவி லேசாக சிரித்தாள். உடலில் ஒரு புத்துணர்ச்சி பரவியது. ''உனக்குத் திருமணமாகிவிட்டதா?'' அவன் திடீ ரென்று கேட்டுவிட்டான். அவளுக்கு என்ன பதில் சொல்வ தென்றே தெரியவில்லை. தன்னை சமாளித்துக் கொண்டு ''இல்லை''

என்றாள். "எத்தனை குழந்தைகள்?" அவன் தன் சிந்தனையை எங்கோ அடகுவைத்துவிட்டு கேட்டான். "எத்தனை குழந்தைகளா? இன்னும் மணமாகவில்லை என்று சொன்னது காதில் விழவில்லையா?" என்றாள் கிண்டலுடன். "ஓ! இன்னும் திருமணம் ஆகவில்லையா............".

அதன்பின் நீண்ட நேரம் அவர்கள் மத்தியில் அமைதி தவழ்ந்தது. அவள் கேட்டாள், "உங்கள் பெயர் என்ன.........?"

"............................"

பதில் இல்லை. அவன் தூங்கிவிட்டான். அவளும் சிரித்துக் கொண்டே இமைகளை மூடினாள். தூக்கம் அவளைத் துரத்திக் கொண்டு வந்தது. எவ்வளவுநேரம்தான் தூங்கினாளோ அவளுக்கே தெரியாது. யாரோ தன்னுடைய தோள்பட்டையை வருடுவதாக உணர்ந்தாள். மெல்ல கண்களைத் திறந்து பார்த்தாள். அவன்—தன்னருகில் உட்கார்ந்திருப்பதை உணர்ந்தாள். அவளுடைய உள்ளத்தில் ஒரு வித உவகை அவளை அறியாமலே உதயமாயிற்று. அவள் மெல்ல சிரித்தாள். கல்லூரி மாணவர்கள் அவள் அழகில் மயங்கி மலரை வட்டமிடும் வண்டுகளைப் போல் அவளை வலம் வரும்போது—அவளுடைய காதலுக்காக எத்தனையோ இளைஞர்கள் தவம் கிடக்கும்போது—இந்த மனிதன் மட்டும் என்ன விசுவாமித்திரனா? அவனும் தான் மேனகையிடம் தோல்வி கண்டவனாயிற்றே, என்று பற்பல எண்ணங்கள் அவள் உள்ளத்தில் உதித்தன.

எந்த ஒரு இளைஞனிடத்திலும் காணாத ஒரு அடக்கத்தை, எந்த ஒரு வாலிபனிடத்திலும் காணாத ஒரு நளினத்தை, எந்த ஒரு ஆணிடத்திலுமே அவள் காணாத கவர்ச்சியை அவள் அவனிடத்திலே கண்டாள். அவன் மெல்ல அவளுடைய முகத்திற்கு நேரேகுனிந்தான். அவள் அவனைதடைசெய்யவில்லை—குவிந்தஅவன் அதரங்கள் அவளுடைய பவள இதழ்களில் பதிந்தன. அவள் திடுக்கிட்டு எழுந்தாள். அங்கே—அவளருகில் அவனைக் காணவில்லை. அவன் படுத்துக்கிடந்த இடம் காலியாகக் கிடந்தது. எங்கோ சேவல் கூவுவதை கேட்டு பொழுது புலர்ந்துவிட்டதென அறிந்து கொண்டாள். தான் இவ்வளவு நேரமும் கண்டது கனவுதான் என்பதை நினைக்க அவளுக்கு சிரிப்பாகவும் ஏமாற்றமாகவும் இருந்தது.

மாதவி மெல்ல எழுந்து அறையிலிருந்து வெளியே வந்தாள். அங்கே அவள் கண்ட காட்சி! காகிதக் கும்பலின் மத்தியில் மேசையின்மேல் தலையை கவிழ்த்தவாறு தூங்கிக்கொண்டிருந்தான் அவன். அவளுக்கு அவன் ஒரு புதிராக இருந்தான். அவனுடைய செயல் ஒவ்வொன்றும் அவளுக்கு விந்தையாக இருந்தது அப்படி இரவு முழுவதும் கண் விழித்து எழுதுபபடியாக அது என்ன அவ்வளவு பெரிய விஷயம் என்று அவனருகே சென்றாள். அவன் கையில் சிக்கி திண்டாடியது பேனா. எழுத்துகளால் நிரம்பிய காகிதங்கள் இங்கும் அங்கும் சிதறிக் கிடந்தன. அவன் எழுதிக்கொண்டிருந்ததைப் புரட்டிப் பார்த்தாள். அவளுடைய கமலக் கண்கள் ஆச்சரியத்துடன் மலர்ந்தன. 'இரவில் வந்தவள்' என்ற கதையை எழுதி முடித்திருந்தான்.

"சார்! பொழுது விடிந்துவிட்டது," என்று அவனை எழுப்பினாள் மாதவி. அவன் எழுந்து நின்று உடலை நெளித்து சோம்பல் முறித்துக்கொண்டான். அவள் அவனை வைத்த விழி வாங்காமல் பார்த்துக்கொண்டிருந்தாள். "ஏன் அப்படிப் பார்க்கிறாய்?" என்றான் அவன் ஒன்றும் புரியாமல். "இரவு முழுவதும் கண் விழித்து என்ன எழுதுனீர்கள்."

"கதை"

"ஓகோ..........எழுத்தாளரா?"

"ஆம்"

"எந்தப் பெயரில் எழுதுகிறீர்கள்?"

"சொந்தப் பெயரில்."

"அந்தப் பெயரைத்தான் கேட்கிறேன்?"

**"எழிலன்"**

"என்ன! கவிஞர் எழிலன் நீங்களா?"

அவளால் தன் செவிகளையே நம்ப முடியவில்லை. ஒரு பிரபல எழுத்தாளர் எழிலனின் வீட்டில், தான் ஒரு நாள் இரவு முழுதும் தங்கியிருந்ததை நினைக்கும்போது அவளுக்குப் பெருமையாக இருந்தது. அவளால் ஒன்றுமே பேசமுடியவில்லை. "சரி நீ பல் துலக்கிக்கொள் நான் பசி தீர்க்கப் பதார்த்தம் ஏதாவது வாங்கி வருகிறேன்," என்றான் கவிஞன் எழிலன். அவள் பதுமைபோல் தலையை ஆட்டினாள். அவன் அவளை ஒருவிதமாகப் பார்த்தபடி வெளியே சென்றான்.

எழில் கையில் உணவுப் பொட்டலங்களுடன் திரும்பி வந்ததும் திகைத்தேவிட்டான். அவனுக்கு அது தன் வீடுதானு அல்லது தவறி வேறு யாருடைய வீட்டிலோ நுழைந்துவிட்டோமா என்ற சந்தேகம் எழுந்தது. ஏனென்ருல் வீடு சுத்தமாக பெருக்கப்பட்டு மேசை நாற்காலிகள் ஒழுங்காக அடுக்கப்பட்டு புத்தகங்கள் அழகாக வைக்கப்பட்டு வீடு பார்ப்பதற்கு நன்ருக இருந்தது.

"என்ன திகைத்து நிற்கிறீர்கள்?" என்ருள் அவள் குறும்புடன்.

..."நான் போய் வருவதற்குள் இவ்வளவு அலங்காரம் செய்துவிட்டாயே?" என்று அவளைத் திரும்பிப் பார்த்தான் எழில்.

இருவரும் காலை உணவருந்த உட்கார்ந்தனர். பசி ஆறி முடிந்ததும் மாதவி மேசையின்மேல் கிடந்த பாரதிதாசனுரின் கவிதைத் தொகுப்பை கையில் வைத்துக்கொண்டு உட்கார்ந்து விட்டதைப் பார்த்த எழில், "என்ன மாதவி, வீட்டிற்குப் போகும் எண்ணம் இல்லையா?" என்ருன்.

"ஏன்? மத்தியானச் சாப்பாட்டிற்கும் உட்கார்ந்துவிடுவேன் என்று பயப்படுகிறீர்களா?"

"நீ உன் வாழ்நாள் முழுவதும் இங்கேயே இருந்தால்கூட எனக்கு திருப்திதான். வீடாவது சுத்தமாக இருக்குமல்லவா?" என்ருன் அவன்.

தன் வாழ்நாள் முழுதும் எழிலுடன் இருக்கும் பாக்கியம் கிடைக்குமா என்பதை நினைக்கும்போது அவள் உடலில் உணர்ச்சி அலைகள் மோதி இன்ப உணர்வை எழுப்பின.

எழிலை விட்டுப் பிரிந்து செல்லும் போது மாதவிக்கு எதையோ பறிகொடுத்துவிட்டுச் செல்வதைப் போலிருந்தது. எழில் அவளுக்கு அன்புடன் கொடுத்த புரட்சிக் கவியின் 'காதல் நினைவுகளை' நெஞ்சோடு அணைத்தவாறு தன் வீட்டை நோக்கி விரைந்து சென்ருள். அவளது இதயத் தராசில், தன்னுடன் பழகும் கல்லூரி மாணவர்களை ஓர் பக்கமும் எழிலை மற்ருேர் பக்கமும் வைத்து எடைபோட்டுப் பார்த்தாள் எழிலனின் எடையே எல்லா வகையிலும் சிறந்ததாக அவளுக்கு தோன்றியது.

முகநக நட்பது நட்பன்று நெஞ்சத்
தகநக நட்பது நட்பு. —குறள்.

# 2. கல்யாண ஆசை

'சங்கொலி' பத்திரிகை உதவி ஆசிரியர்களின் ஒருவனை எழில், அன்றையபத்திரிகைக்கு கவிதைஒன்றுதீட்டுவதில் மும்முரமாக முனைந்திருந்தான். கௌரவ ஆசிரியர் **கண்ணபிரான்** கற்பனை உலகில் உலவிக்கொண்டிருந்தார். வெண்மை நிறத்தைப் போக்க வழக்கமாகத் தடவும் கறுப்பு மையை சற்று அதிகமாகவே தடவியிருந்தார். காலமென்னும் அரக்கன் விகாரமான பல கோடுகளை கிழித்திருந்த அவருடைய அகன்ற நெற்றியில் அழகாக ஜொலித்தது தங்கத்தூள் தெளித்த குங்குமப்பொட்டு. சந்தனப் பரிமளம் பூசிய கைகளால் 'அமிர்தாஞ்சனத்தை அடிக்கடி எடுத்து நாசுக்காக நெற்றியில் தடவிக்கொண்டிருந்தார். கால தேவனின் இதயத் துடிப்பு அவரது இளமையை ஒன்றும் செய்துவிடாமல் 'தங்க பஸ்பம்' அவர் உடலை 'தகதக'வென ஜொலிக்கச் செய்தது.

ஆபீஸ் பையன் முத்து அலறி அடித்துக்கொண்டு ஓடி வந்து கண்ணபிரானின் முன் நின்றான். அவர் அவனை அலட்சியமாகத் திரும்பிப் பார்த்தார். "**மன்னார்சாமி** உங்களைப் பார்க்க வந்திருக்கிறார்," என்று கூறிவிட்டு அவருடைய பதிலுக்கு காத்துக் கிடந்தான் முத்து. "யார், மன்னார்சாமியா? போ போ உடனே உள்ளே அனுப்பு," என்று இரைந்து கத்தினார் கண்ணபிரான். ஆபீஸ் பையன் விழுந்தடித்துக்கொண்டு வெளியே ஓடினான். தொண்டையை கனைத்துக்கொண்டு ஒரு முரட்டு மனிதன் முறுக்கிய மீசையுடன் முட்டைக் கண்களை உருட்டி விழித்தபடி அசட்டுச் சிரிப்பை அனாவசியமாக அள்ளித் தெளித்துக்கொண்டு ஆசிரியரின் முன் வந்து நின்றான். "உட்காருங்கள் மிஸ்டர் மன்னார்சாமி, டேய் பையா ஒரு ஓவல் கொண்டுவா" என்று முழங்கினார் கண்ணபிரான்.

அங்கிருந்த எல்லோரின் கண்களும் ஏக காலத்தில் அந்தப் புதிய மனிதனை மொய்க்க ஆரம்பித்தன. அந்த மனிதனோ யாரை

யும் பொருட்படுத்தாமல் ஆபீஸ் பையன் கொண்டுவந்து வைத்த 'ஓவலை' இரண்டு மடக்கில் குடித்துவிட்டு கோப்பையை 'டக்' கென்று மேசையில் வைத்தான்.

கவிதையை எழுதி முடித்துவிட்டு விரல்களை சொடுக்கியபடி எழில் அந்த மனிதரை ஒரு கணம் பார்த்துவிட்டு பார்வையை அப்படியே தனக்கு பக்கத்து மேசையில் இருக்கும் ஓவியன் இளங் கோவனை நோக்கி வீசினான். இளங்கோவின் ஒவ்வொரு கை வண்ணமும் உயிரோவியமாக பரிமளிக்கும். இளங்கோ தான் எழில்—எழில்தான் இளங்கோ என்று எல்லோரும் கூறும் அள விற்கு அவர்கள் அன்பு வளர்ந்திருந்தது. உயிருள்ள எழுத்துக் களின் மூலம் எழில் நிறை கவிதைகளை தீட்டுவதில் நிபுணன் எழிலன்—ஒப்பற்ற ஓவியத் திறமையின் மூலம் அந்தக் கவிதையை கண்கவர் சித்திரமாய் வரைவதில் வல்லவன் இளங்கோ.

வழக்கத்திற்கு விரோதமாக சோகம் கப்பிய முகத்துடன் களைந்த தலைமுடியை ஒரு கையால் வருடியவாறு மறுகையால் மங்கை ஒருவள் மலர் பறிக்கும் காட்சி ஒன்றை சித்திரமாகத் தீட்டிக்கொண்டிருந்தான் இளங்கோவன். எழில் உதட்டைக் குவித்து அவனுக்குமட்டும் கேட்கும்படியாக மெல்ல ஊதினான். இளங்கோ அவனைத் திரும்பிப் பார்த்து மெல்ல சிரித்தான். அந்த சிரிப்பில் சிக்கிக் கிடந்தது 'சோகச் சூழல்' என்பது எழிலுக்குத் தெரியாமலில்லை.

அறைக் கடிகாரம் மாலை மணி ஆறு என்பதை தன்னுடைய ஜலதரங்க ஓசையின் மூலம் அறிவுறுத்தியது, மெல்லிய குரலில் பேசிக்கொண்டிருந்த கண்ணபிரான் கடிகாரத்தை ஒரு முறை பார்த்துவிட்டு மன்னர் சாமியைப் பார்த்து, "வாருங்களேன் நம்ம வீட்டிற்குப்போய் பேசிக்கொள்ளலாம்," என்றார். அந்தத் தொங்கு மீசை ஆசாமி முக மலர்ச்சியுடன் எழுந்து நின்றார். இருவரும் அந்த அறையை விட்டு ராஜநடை நடந்து போவதை எல்லோரும் வாயைப் பிளந்தபடி பார்த்துக்கொண்டு நின்றார்கள். ஆபீஸ் பையன் காரின் கதவைத் திறந்து இருவரும் ஏறியவுடன் 'டக்'கென்று சாத்திவிட்டு பயபக்தியுடன் கார் கண்ணுக்கு மறையும் வரையில் நின்றுவிட்டு, உள்ளே தன்னுடைய இடத்தில் போய் அமர்ந்தான்.

அன்று பத்திரிகை அலுவலகத்தைவிட்டு வெளியே வரும போது எழில் இளங்கோவின் வருகைக்காக வெளியே காத்துக் கொண்டிருந்தான். அந்தக் குறுகிய காலத்திற்குள் ஆபீஸ் பையன் முத்துவை கிண்டல் செய்வது அவன் வழக்கமாகையால் அன்றும் "என்னப்பா முத்து, உன் கல்யாணத்தைப்பற்றி ஊரெல் லாம் டமாரம் அடித்தாயே அது என்னவாயிற்று," என்றான். "நமக்கு என்ன சார் கல்யாணம். அது ஒன்று இல்லாமல்தான் ஒன்றும நடக்கவில்லையா?" என்று சலித்துக்கொண்டான் முத்து. "இது எப்போது இருந்தப்பா இந்த வேதாந்தம்," என்றான் எழில் அவனை குறும்பாகப் பார்த்தபடி. "பின்ன என்னசார், கட்டையில போறதுக எல்லாம் கல்யாணம் செய்துக்க அலையு துக, நமக்கெங்கசார் பெண்கிடைக்கப் போகுது," என்றான் விரக் தியுடன் முத்து. ஒன்றும் புரியாமல் விழித்தான் எழில். "என்ன சார் உங்களுக்கு ஒன்றுமே தெரியாதா? இன்றைக்கு இங்கே வந்தாரே ஒரு கொம்பு மீசைக்கார ஆசாமி அவர் மூலமாக நம கௌரவ ஆசிரியர் 'பிரான்' திருமணம செய்துகொள்ளப் போகி றார்," என்று அதிர் வெடி ஒன்றை தூக்கிப் போட்டான் முத்து. "என்ன? நம் ஆசிரியரா திருமணம் செய்துகொள்ளப் போகிறார்?" என்று வியப்புடன் வினவினான் எழில். "ஆமாம் சார், அந்தக் கட்டையில் போகும் கிழவனுக்குத்தான் சார் கல்யாண ஆசை," என்று கனல் தெறிக்கப் பேசினான் முத்து.

அப்போது இளங்கோ அங்கே வரவே அந்தப் பேச்சை அத் துடன் முடித்துக்கொண்டு அவனுடன் நடையைக் கட்டினான் எழில். வழிநெடுகிலும் வாய் வலிக்கப் பேசிக்கொண்டு வரும இளங்கோ அன்று மௌனமாக நடப்பதைக் கண்ட எழிலுக்கு என்னவோபோல் இருந்தது. இறுதியில் எழிலே ஆரம்பித்தான், "என்ன இளங்கோ ஏன் ஒரு மாதிரியாக இருக்கிறாய்? புதிதாக தாம்பத்ய வாழ்க்கையில் காலடி எடுத்து வைக்கும நீ கலகலப்பாக இருக்கவேண்டாமா?" "அதெல்லாம் ஒன்றுமில்லை எழில், சிறிது தலைவலி. எல்லாம் சரியாகிவிடும்," என்று மழுப்பினான் இளங்கோ. "தலைவலிக்கு கடல் காற்று நல்ல மருந்து வா போகலாம," என் றான் எழில். "வேண்டாம் எழில் வீட்டிற்குப் போய் தைலம தடவினால் எல்லாம சரியாகிவிடும்," என்றான் இளங்கோ. "அது கூட தேவையில்லை, உன்னுடைய அன்பான மனைவியின் கைபட் டால் போதும் எல்லாம் பறந்துவிடும," என்று கிண்டல் செய் தான் எழில்.

மவுனமாக தன் போக்கில் போய்க் கொண்டிருந்தான் இளங்கோ. இருவரும் பிரிய வேண்டிய இடம் வந்ததும் இளங்கோ "போய் வருகிறேன் எழில்", என்று அவன் பதிலுக்குக் கூட காத்திராமல் போயே விட்டான். இளங்கோவின் போக்கும் கண்ணபிரானின் செயலும் அவனுக்கு ஒன்றுமே புரியவில்லை. அவன் மனதில் 'கிழவனுக்கு கல்யாண ஆசை' என்று முத்து சொல்லியது வளைய வளைய வந்து சுழன்றது.

ஊட லுணர்தல் புணர்த லிவைகாமங்
கூடியார் பெற்ற பயன் —குறள்.

# 3. கானல் வெளி

மங்கலான தெரு விளக்கை சுற்றி விட்டில்கள் பறந்து கொண்டிருந்தன. 'வேலையற்றதுகள்' வீதியை வீடாகப் பாவித்து துயில் கொண்டிருந்தன. குரைத்து ஓய்ந்த நாய்கள்கூட குறட்டைவிட்டு தூங்க ஆரம்பித்தன. எங்கும் அமைதி ஆட்சி நடத்தும் அவ் வேளையில் நீண்ட சாலையில் சோர்ந்து நடந்தபடி வந்து கொண்டிருந்தான் ஓவியன் இளங்கோ.

வீட்டை நெருங்க நெருங்க அவன் மனதிலே சஞ்சலம் பெருகிக் கொண்டே வந்தது. அவன் வீட்டில் மங்கலாக எறிந்து கொண்டிருந்தது மேசை விளக்கு. இளங்கோ மெல்ல கதவைத் தட்டினுன். அவன் மனைவி மல்லிகா உடனே கதவைத் திறந்தாள். அவன் உள்ளே சென்றதும் கதவை வெறுப்புடன் சாத்திவிட்டு அடுக்களைக்குள் போய் அவனுக்கு உணவு பரிமாறத் தொடங்கினுள். இளங்கோ உடைகளை மாற்றிக் கொண்டு கைகால் அலம்பிவிட்டு உணவை சிறிது அருந்திவிட்டு படுக்கையில் வந்து படுத்தான். சிறிது நேரத்தில் அவன் மனைவி மல்லிகாவும் அங்கு வந்தாள். இருவரும் இன்னும் ஒரு வார்த்தைகூட பேசவில்லை அதற்குக் காரணம் இல்லாமல் இல்லை.

தாம்பத்ய வாழ்வில் ஊடல் ஏற்படுவது இயற்கை. வள்ளுவர் கருத்துப்படி ஊடல் அற்ற வாழ்க்கை இன்பம் பயக்காது. ஆனல் இளங்கோ–மல்லிகா தம்பதிகள் வாழ்வில் 'ஊடல்' ஏற்படவில்லை. மணமாகி மாதம் மூன்றுகூட சரியாக ஆகவில்லை அதற்குள் இருவருக்கும் வாழ்க்கை கசந்துவிட்டது.

மணமான புதிதில் மல்லிகா இளங்கோவின் மேல் உயிரையே வைத்திருந்தாள். அவனும் அவளை சதா வலம் வந்து கொண்டே இருந்தான். ஓவியக்கலையில் ஒப்பற்ற திறமைசாலியான அவன், அவளுடைய அழகிய உருவத்தை பலவிதமாக வரைந்து அவளிடம் காட்டுவான். தண்ணீர் குடம் ஏந்தியவாறு—தளிர் உடல் அசைய மலர் பறிப்பதுபோல்–கொடி அன்ன இடை நெளிய அவள் நடனம் ஆடுவதாக இன்னும் எத்தனையோ விதங்களில் அவளை ஓவியமாக்குவான்.

இவ்வாறு சுழன்ற அவர்கள் காலச்சக்கரம் திடீரென்று தடைப்படுவதாக அவர்கள் மத்தியில் நிகழ்ந்தது அந்த அதிருப்தி. ஒரு பெண்ணுக்கு கணவனின் அன்பும் ஆதரவும் இருந்துவிட்டால் போதுமா? அவன் அவளை அன்பு மொழிகளால் ஆலிங்கணம் செய்தான்–பொன் நகைகளை பூட்டி அவள் முகத்திலே புன்னகையை வரவழைத்தான்–அவள் உடலை பட்டால் போர்த்தி பரவசப்படுத்த முயன்றான். ஆனல்–பொன்னலும், பொருளாலும், வெறும் அன்புப் பேச்சாலும் ஒரு பெண் எவ்வளவு நாளைக்குத் தான் திருப்தி அடைந்து விட முடியும்? இவை எல்லாவற்றையும் விட ஒரு பெண் ஒரு ஆணிடம் எதை விரும்புகிருள்?

பெரும்பாலும் எல்லோரும், ஆணும் பெண்ணும் முதலில் அன்பையும் பின்பு ஊடலையும் அதன் பின் கூடலையும் தானே விரும்புவார்கள். அதற்கு மல்லிகா மட்டும் என்ன விதிவிலக்கா? மல்லிகாவிற்கு இருக்கும் அந்த ஆசை ஏன் இளங்கோவனுக்கு மட்டும் கிடையாது?

மணமான புதிதில் அவன் தன்பால் காட்டிய அந்த சிரத்தையை ஏன் இப்போது காட்டவில்லை என்பதை நினைக்கும் போது மல்லிகாவின் உள்ளத்திலே துயரம் உடைப்பெடுத்த வெள்ளம் போல் பெருகியது. இதயத்தைக் கசக்கிப் பிழிந்த துன்பம் விம்மலாக மாறி வெள்ளப் பிரவாகத்தைப் போல் வேதனைக் கண்ணீரை வடித்தன அவளது விழிகள். முகத்தைத் தலையணையில் பதித்தவாறு விம்மி விம்மி அழுதாள்.

அவளுடைய விம்மல் ஒலி ஒவ்வொன்றும் இளங்கோவின் இதயத்தில் வேலாகப் பாய்ந்து வேதனையை எழுப்பியது. அவனால் அவள் அழுவதைச் சகித்துக் கொண்டிருக்க முடியவில்லை. ஆனால் அதே சமயம் அவளைத் தேற்றுவதற்கு வேண்டிய போதுமான திறம் அவனிடம் இல்லை; என்ன செய்வான் இளங்கோ? அவளை திருப்தி செய்ய முடியாமல், ஆண்மையற்றதோர் தன்மையோ—இனம் தெரியாத கோழைத்தனமோ, அல்லது இன்னதென விவரிக்க முடியாததோர் சக்தியோ ஏதோ ஒன்று அவனைத் தடுத்து நிறுத்துகிறது.

மல்லிகா—பருவமென்னும் குன்றேறி நிற்கும் இளநங்கை. பீறிக் கொண்டு வரும் உணர்ச்சிப் பிரவாகத்திற்குத் தடுப்பு மசோதா போட அவளென்ன காதலை வெறுத்த மணிமேகலையா? வாழ்க்கையை அணு அணுவாக ரசிக்க வேண்டிய இளமைக் காலத்தில் பஞ்சணையில் முகம் புதைத்து விம்ம வேண்டிய பரிதாப நிலையை ஏற்படுத்திய அவன்—ஒரு நரைமுதிர் கிழவனல்ல—கட்டான உடல் படைத்த காளை. உயிருள்ள சித்திரங்கள் தீட்டுவதில் நிகரற்ற ஓவியன். ஆனால் இவ்வளவு திறம்படைத்த அவனால் தன்னை திருப்தி செய்ய முடியவில்லையே என்று நினைக்கும் போதுதான் மல்லிகாவின் மனம் மாயாத துயரத்தில் மூழ்கித் தவித்தது.

திருமணத்திற்கு முன்பு அவள் கட்டிய மனக்கோட்டைகள் எல்லாம் மண்மேடாகிவிடும் என்று அவள் கனவுகூட கண்டிருக்க மாட்டாள். கண் நிறைந்த கணவனுடன் உல்லாச வாழ்வு வாழலாம், வையகத்தில் தான் ஒருவளே வாழ்க்கைக் கலையில் கரை கண்டவளென்பதை பறை சாற்றலாம் என்றெல்லாம் இறுமாந்திருந்த அவள் தன் வாழ்வு இப்படி ஒரு பாழடைந்த கோவிலாகி விடும் என்று நினைத்தாளா?

இன்பச் சோலை என்று நினைத்தாள்—ஆனால் அது இடுகாடாகிவிடும் என்று அவளுக்குத் தெரியாது. தென்றலை தழுவ துடிதுடித்தாள், ஆனால் அது தீய்த்திடும் நெருப்பாக மாறும் என்று அவள் அறியவில்லை. தன் வாழ்வில் நொங்கும் நுரையுமாக பொங்கும் புது வெள்ளமென பூரித்திருந்தாள். ஆனால் அது வெறும் 'கானல் வெளி'யாக காட்சியளிக்கும் என்று அவள் அறியவில்லை.

ஆகாசக் கோட்டை கட்டிய ஆரணங்கு கண்ணீர் உகுக்கும் சோகச் சிலையாக மாறிவிட்டாள். தினமும் ஏங்குகிருள் தன் கணவனிடம் ஏதோ ஒன்றை எதிர்பார்த்து. ஆனல் ஏமாற்றம்தான் அவளுக்குக் கிடைக்கும் பரிசு. வாழ ஆசைப்படுகிருள், ஆனல் வாழ முடியாதவளாக இருக்கிருள்.அவள் மனம் துன்பமே போ! துன்பமே போ!! என்று ஏங்கி ஏங்கி சாகாமல் சாகிறது. இன்பம் எங்கே? இன்பம் எங்கே?? என்று தேடித் தேடி ஓடுகிருள். ஆனல் அந்தோ பரிதாபம்—அவளைச் சுற்றி எங்கும் ஒரே கானல் வெளி.

உள்ளக் களித்தலுங் காண மகிழ்தலுங்
கள்ளுக்கில் காமத்திற் குண்டு —குறள்

# 4. எதிர்பாராதது

**வை**யகத்தைத் தழுவி நின்ற இருளதனை விரட்டியடித்தபடி கிழக்கே ஆழி நீங்கி வானின் மீது ஆதித்தன் எழுந்தான். 'இருளரக்கனை போரில் வென்று புவனமெங்கும் புத்தொளி பரப்பும் எழில் இளங்கோவே நீடு நீ வாழி இவ் வையத்தில் என்று வாழ்த்துவது போல் சேவல் உரத்த குரலெடுத்துக் கூவியது.

மாந்தரெல்லாம் தத்தம் அலுவல்களை நோக்கி விரைந்து சென்று கொண்டிருந்தார்கள். சோம்பலை நீக்கி நாள் முழுதும் உழைத்து வாழும் எறும்புக் கூட்டங்களைப் போல் சாலை ஓரத்திலே சாரி சாரியாக நடந்து கொண்டிருந்தார்கள், உரசிக் கொண்டு போகும் 'பிளசர்' கார்களுக்கு பயந்த மக்கள்.

வர வர மனிதர்களின் நடமாட்டம் குறைந்து கொண்டே வந்தது. அந்த வேளையில் அள்ளி அடுக்கிய புத்தகங்களை மார்புடன் அணைத்தபடி வான வீதியில் பவனி வரும் பால் வண்ண நிலவைப் போல் ஒய்யாரமாக நடந்து வந்தாள் மாதவி. அவள் கால்கள் அவளைப் பள்ளியை நோக்கி இழுத்துக் கொண்டு சென்றதே ஒழிய அவள் எண்ணமெல்லாம் கற்பனை உலகில் சிறகடித்து பறந்து கொண்டிருந்தது.

அவள் உள்ளத்தில் எழிலின் தோற்றமே தொடர்ந்து சாட்சி அளித்துக் கொண்டிருந்தது. அவளையும் அறியாமல் அவள் மனம் எழிலை நாடியது. நாள் முழுதும் எத்தனையோ நவநாகரீக உலக வாலிபர்களும்—மங்கையரை மயக்கும் மைனர்களும்—காரிகையரை கலங்கடிக்கும் கட்டுடல் காளையர்களும் அவள் காதலை எதிர் பார்த்து ஏங்கி வாடும் போது யாருக்குமே படியாத மங்கை மாத வியின் உள்ளம் எழிலனைக் கண்டதும் உருகும் பாகாகிவிட் டதை நினைக்க அவளுக்கே வியப்பாய் இருந்தது.

காதலையும் காமத்தையும் ஒன்றாக மதிக்கும் இன்றைய இளை ஞர்களின் மத்தியிலே பழகிய அவளுக்கு 'ஓர் இரவு' முழுவதும் தனிமையில் ஆதரவற்று இருந்த ஒரு பெண்ணை ஏறிட்டும் நோக் காத எழிலை நினைக்கும் போது அவன் மேல் அவளுக்கு மரியாதை பிறந்தது. அறிவொளி வீசும் அவனுடைய முகமும்—அன்பைப் பொழியும் கண்களும்—சாந்தம் தவழும் தோற்றமும் ஆண்மை

யுடன் கூடிய அடக்கமும்—பெண்களிடம் அவன் காட்டும் மரியா தையும் அவளுக்கு மிகவும் பிடித்திருந்தது. அவன் நினைத்திருந் தால் அவளை மயக்கியோ மருட்டியோ அவளது கற்பை களங்கப் படுத்தியிருக்க முடியும் அந்தகாரம் சூழ்ந்த அந்த இரவில். ஆனால் அவன் அவளிடத்தில் எவ்வளவு பண்பட்ட முறையில் நடந்து கொண்டான் என்பதை நினைத்துப் பார்க்க அவளுக்கு விந்தையாக இருந்தது.

அந்த இரவில், தான் பயந்து போய் ஓடி அவனை இறுகக் கட்டிப் பிடித்துக் கொண்டதை நினைக்கும்போது அவள் உட லிலே நாணமும் அதே சமயம் விவரிக்க முடியாத இன்ப உணர் வும் பரவியது. அதே இரவில் அவள் கண்ட அந்த 'இன்பக் கன'வை எண்ணும் போது அவளது பளிங்குக் கன்னங்கள் செந் தாழம் பூவைப் போல் சிவந்து விட்டன. 'எழில், எழில்' என்று அவள் மெதுவாகக் கூறிப் பார்த்துக் கொண்டாள். அவளுடைய நாவில் இன்பத்தேன் சுரந்தது போல் உணர்ந்தாள்.

'எழுத்தின் வேந்தர்! கதை பல எழுதிய ஆசிரியர்! உயி ருள்ள கவிதைகள் தீட்டிய கவிஞர் திலகம்! ஏடாட்சி புரியும் ஏந் தல்! இலக்கிய கலா மன்னர்! அவரை என் காதல் துரையாக— கணவனாக நான் அடையும் பேறுபெறுவேனா? என்று ஏங்கினாள்.

அந்த ஏக்கத்தின் எதிரொலி அவள் முகத்திலே சோக ரேகைகளை ஆழமாக கிழித்தது. அவளுடைய இதயத்திலிருந்து வெளிப்பட்ட பெருமூச்சு அவளுடைய மார்பகங்களை விம்மித் தணியச் செய்தது.

இதயத்தை எழிலனிடம் பறிகொடுத்துவிட்டு கனவில் நடப்பவளைப் போல் நடந்து கொண்டிருந்தாள் மாதவி. திடீரென்று யார்மேலோ முட்டிக் கொண்டாள். அவ்வளவுதான் அவள் கையிலிருந்த புத்தகங்கள் 'தட தட வென தரையில் விழுந்தன. தொடர்ந்து வான வெளியில் பறந்து கொண்டிருந்த அவளுடைய சிந்தனைப் பறவை சிற கொடிந்து தலை குப்புற தரையில் வந்து விழுந்தது. அவள் திடுக்கிட்டு பயந்து தான் முட்டிக்கொண்ட அந்த மனிதனைக் கடைக் கண்ணால் நோக்கினாள். அங்கே—அவள் கண் களை அவளாலேயே நம்ப முடியவில்லை. ஆம்! எழில் தான் நின்று கொண்டிருந்தான்.

மாதவிக்குத் தாங்க முடியாத மகிழ்ச்சி. "நீங்களா?" என்றாள் உவகையுடன். "மாதவி", என்றான் எழில் ஆச்சரியத்துடன்.

மாதவி குனிந்து புத்தகங்களை எடுத்தாள். அவனும் குனிந்து அவளுடன் சேர்ந்து புத்தகங்களை எடுத்து அடுக்கினான். எஞ்சி தரையிலே கிடந்த ஒரு புத்தகத்தை எடுக்க அவன் கையை நீட்டினான், அவளும் நீட்டினாள். இருவர் கைகளும் ஒன்றோடொன்று மோதின. அவனுக்கு முன் அவள் கையில் சிக்கியது புத்தகம். அவள் 'கல கல'வென சிரித்தாள். அவனும் அவளுடன் சேர்ந்து சிரித்தான்.

அவளுக்கு அவனிடம் ஏதேதோ பேச வேண்டுமென்றுதான் ஆசை. ஆனால் அவர்கள் நிற்பதோ வீதி என்பதை நினைத்துத் தயங்கினாள். "மாதவி, நான் வருகிறேன். வேறு எந்த கோவலன் மேலாவது முட்டிக் கொள்ளாமல் பார்த்துப் போ", என்றான் எழில். "சார்! கவிஞர் சார்.........", என்று தயங்கினாள் மாதவி. "என்ன மாதவி, சொல்", என்றான் எழில். "இன்றைக்கு மாலையில் என்னை 'பன்னீர் செல்வம் பூங்காவில்' சந்திக்கிறீர்களா? உங்களிடம் ஒரு விஷயம் பேச வேண்டும்" என்றாள் தட்டுத் தடுமாறி. "சரி, வணக்கம்" என்று போய்விட்டான் எழில். அவள் தன் கருத்துக்கிசைந்தவனை நேரில் கண்ட பூரிப்பில் அக மிக மகிழ்ந்தாள். அந்த 'எதிர்பாராத' சந்திப்பு மிகவும் இனித்தது அவளுக்கு.

அடக்கம் அமரரு ளுய்க்கும் அடங்காமை
ஆரிரு ளுய்த்து விடும். —குறள்.

# 5. எங்கிருந்தோ வந்தவன்

பகலோன் கீழ் வானத்தை நோக்கி இறங்கிக் கொண்டிருந்தான். பகல் வர வர மங்கி இருளின் ஆதிக்கம் மெல்ல மெல்ல தலை தூக்கியது. அந்த வேளையில் மல்லிகா துன்பத்தின் இருப்பிடமாய் சோகத்தின் உறைவிடமாய் அல்லல் நிறைந்த உள்ளத்துடன் அமைதியற்ற நிலையில் வாசலில் உட்கார்ந்திருந்தாள், தன் கணவனின் வரவை எதிர்பார்த்து.

அவளுடைய விழிகள் மட்டும் வழிமேல் இலயித்திருந்ததே தவிர எண்ணமெல்லாம எங்கெங்கோ அவளை இழுத்துச் சென்றது. இளங்கோவைப் பற்றி நினைக்கும்போது அவளுடைய நெஞ்சம் வெடித்துவிடும் போல் இருந்தது. அவள் மனதிலே இரண்டு நாட்களுக்கு முன் நடந்த சம்பவம் சலனப் படம் போல் ஓடியது.

அன்றும் வழக்கம் போல் இளங்கோ அவளைத் திரும்பிக்கூட பார்க்காமல் தூங்கிக் கொண்டிருந்தான். அவள் நுகரப்படாத புது மலராகவே அவனுக்குப் பக்கத்தில் கிடந்தாள். அவளுக்கு தூக்கமே வரவில்லை புரண்டு புரண்டு படுத்தாள், இருந்தும் அந்த பொல்லாத தூக்கம் தொலை தூரத்திற்கு ஓடியது. அவள் மெல்ல எழுந்தாள். குனிந்து தன் கணவனை நோக்கினுள். அவன் நிம்மதியாகத் தூங்கிக் கொண்டிருந்தான். அவள் உடலை அரித்துக் கொண்டிருந்த இன்ப உணர்ச்சி படமெடுத்து ஆடும் நாகத்தைப் போல் சீறியது.

அவள் "அத்தான்!" என்ருள் போதையுடன்.

"மல்லிகா, தூக்கம் வரவில்லையா?" என்று கேட்டபடி திரும்பிப் படுத்துக்கொண்டான். அவளுடைய உள்ளம் உலைக்கள

மாக மாறியது. நீண்ட நேரம் விம்மி விம்மி அழுதாள். அழுவதைத் தவிர அவளால் வேறு என்ன செய்ய முடியும்? கண்ணீர் ஒன்று தானே அவள் கவலையைப் போக்கும் மருந்து. அவளுடைய உள்ளக் கொதிப்பை வார்த்தைகளால் வடிக்க முடியுமா அந்த வனிதையால். அப்படியே சொல்ல முயன்றாலும் அவளை நாணம மென்னியைப் பிடித்து நெரிக்கிறதே 'பெண்' என்ற காரணத்தால்.

அவள் எவ்வளவு நேரம்தான் அப்படியே அழுது கொண்டிருந்தாளோ தெரியாது. திடீரென்று பகலவன் புறப்பாட்டை பறையறைவது போல் கேட்டது சேவலின் குரல். அவள் எழுந்தாள்! ஏக்கத்துடன் இளங்கோவை நோக்கினாள். அவன் நிம்மதியுடன் துயில் கொண்டிருந்தான். அவளுக்கு அவன் மேல் அர்த்தமற்ற ஓர் வெறுப்பு பிறந்தது. தன்னுடைய வாழ்வு இப்படியே கழிந்து விடுமா? வாழ்வில் இன்பம் என்பதே இன்னதென்று தெரிந்து கொள்ளாமலே போய் விடுமா? என்பதை நினைக்கும் போது அவள் உள்ளத்திலிருந்து வெளிப்பட்டது ஓர் ஆழமான பெருமூச்சு.

சிந்தனையில் சிக்கி உழன்று கொண்டிருந்த மல்லிகாவிற்கு 'பூம்' என்ற காரின் 'ஆர்ன்' சப்தம் கேட்டதும் சுய உணர்வு வந்தது. தன் வீட்டைத் தாண்டி அடுத்த வீட்டின் முன் போய் நின்ற அந்தக் காரிலிருந்து கருப்பு நிற கால்சட்டையும வெண்மையான 'புஷ்கோட்டும்' போட்ட ஒரு பதினெட்டு வயது வாலிபன் இறங்கினான். 'மோட்டார் ஓட்டி' அவனுடைய பெட்டி படுக்கைகளை இறக்கிக் கீழே வைத்தான். அவன்-அந்த இளைஞன் அனுவசியமாக தன் பர்சிலிருந்த பணத்தை எடுத்துக் கொடுத்துவிட்டு பெட்டியைத் தூக்கிக் கொண்டு வீட்டின் உள்ளே சென்றான். அவனுடைய படுக்கை யாருமற்ற அனாதையாக அங்கே வெளியே கிடந்தது. கார் புழுதியைக் கிளப்பிக்கொண்டு மறைந்ததும அவன் மீண்டும் வெளியே வந்து படுக்கையைத் தூக்கினான். தூக்கிக் கொண்டு நிமிர்ந்தவன், அங்கே அடுத்த வீட்டிலிருந்து ஒரு பெண் தன்னையே பார்த்துக் கொண்டிருப்பதைக் கண்டதும திடுக்கிட்டு அவளை நோக்கினான். அவள் கண்களும் அவன் கண்களும் ஒன்றை ஒன்று சந்தித்தன. அவன் குறும்பாகச் சிரித்தான். அவள் வீட்டினுள் ஓடிவிட்டாள்.

வீட்டிற்குள் ஓடிய மல்லிகாவிற்கு ஆனந்தம் அணை கடந்த வெள்ளம் போல் பெருகி உடலில் 'புத்துணர்ச்சி'யைப் புகுத்தியது. அவளுக்கு அவனைப் பார்க்க வேண்டும் போல் தோன்றியது. அவள் மீண்டும் வாசலுக்குச் சென்றாள். அங்கே அவனைக் காணவில்லை. ஏக்கத்துடன் பக்கத்து வீட்டை நோக்கினாள். அங்கே எப்போதுமே சாத்திக் கிடக்கும் பக்கத்து வீட்டு சன்னல் திடீரென்று திறந்து கொண்டது. அங்கே-அந்த சன்னலில் நின்று கொண்டிருந்தான் அந்த இளைஞன்.

மல்லிகா 'விருட்' டென்று ஓடினாள்-உள்ளே, அதே சன்னலுக்கு எதிரே உள்ள அவளுடைய அறை சன்னலையும் திறந்தாள். அங்கிருந்து அவனை அவள் நன்றாகப் பார்க்க முடிந்தது. அவன் அவளுக்குப் பத்தடி தொலைவில் தான் நின்று கொண்டிருந்தான். அவள் தன்னைப் பார்ப்பதை அவன் தெரிந்து கொண்டு அவளை கண் இமைக்காது பார்த்துக் கொண்டிருந்தான். எவ்வளவு நேரம் தான் அப்படியே ஒருவரை ஒருவர் பார்த்தபடி நிற்பது. அவன் மெல்ல சிரித்தான். அவளுடைய முகம் குங்குமச் சிமிழியைப் போல் சிவந்து விட்டது. வெட்கத்துடன், வானம் பாடியைப் போல் அவ்விடத்தினின்றும் பறந்துவிட்டாள்.

வாசலில் "மல்லிகா! மல்லிகா!!" என்ற குரல் கேட்டு ஓடினாள் மல்லிகா. அங்கே அடுத்த வீட்டு பாட்டி நின்று கொண்டிருந்தாள். "என்ன, பாட்டி வேண்டும்?" என்று வினவினாள். "ஒரு வாய்க்கு தாம்பூலம் தாடி ஆயா" என்றாள் பாட்டி வழக்கமான சலிப்பு நெளிப்புகளுடன். மல்லிகா தாம்பூலத்தட்டை அவள் கையில் நீட்டியபடி "என்ன பாட்டி சாத்திக்கிடந்த உங்கள் மேல்மாடி சன்னலுக்கு இன்றைக்குத் திறப்பு விழாவா?" என்றாள் தெரியாதவளைப் போல். "புதுசா ஒரு பையன் குடி வந்திருக்கிறான்" என்றாள் பாட்டி உப்பு சப்பின்றி. "யார் பாட்டி அந்தப் பையன்?" என்றாள் மல்லிகா இயற்கையுடன். "படிப்பு வசதிக்காக இங்கே வந்திருக்கிறானும், எங்கிருந்தோ வந்தவன், நல்ல பையன்" என்று கூறிவிட்டு பாட்டி நழுவி விட்டாள். மல்லிகா பக்கத்து வீட்டு சன்னலை ஏறிட்டு நோக்கினாள். அங்கே அந்த 'எங்கிருந்தோ வந்தவன்' அவளையே பார்த்தபடி நின்று கொண்டிருந்தான்.

காலை யரும்பிப் பகலெல்லாம் போதாகி
மாலை மலருமிந் நோய் —குறள்

# 6. காதல் அரும்பிய நா

மந்தகாசத் தென்றல் மருவிடும் மாலை வேளை. செக்கர் வானம்—அதைத் தொடுவது போல் உயரே பறக்கும் புள்ளினங்கள். நெடிய வானைத் தழுவுவது போல் அமைந்த நீலக்கடல். அதன் ஓரத்திலே அமர்ந்து அன்பு மொழி பேசும் காதலர்கள். இத்தகைய இன்ப நேரத்திலே—

இருண்டு கிடந்த தன் அறையில் அமர்ந்து தன்னை மறந்து எழுதிக் கொண்டிருந்தான் எழில். அவனுடைய விரல்களின் இடையிலே சிக்கிய எழுதுகோல் வெண்ணிற ஏட்டில் கருமை யான எழுத்துக்களை உமிழ்ந்து கொண்டிருந்தது. அவன் எழுதினான்! எழுதிக்கொண்டே இருந்தான். ஏடுகள் பலவற்றை எழுத்துக்களால் நிரப்பினான்.

எழுதிக் கொண்டிருந்த அவனுடைய எழுது கோலில் மசி குறைந்த காரணத்தால் எழுதுவதை நிறுத்தியது. எழில் தன் கையிலுள்ள எழுது கோலை மேசை மேல் வைத்துவிட்டு விரல் களை சொடுக்கியபடி நிமிர்ந்தான். அவன் கண்கள் அதிசயத்தால் மலர்ந்தன. அங்கே—மாதவி நின்று கொண்டிருந்தாள். அவளுடைய வளைந்த வில்லன்ன புருவங்களின் மத்தியில் கதிர் பரப்பிய குங்குமத் திலகத்தின் மேலே நிலவு போன்ற நெற்றியில் விழுந்து புரண்டது அவளது சுருண்ட கேசங்கள். அவளுடைய நாசிக்கும் கீழே மலரொக்கும் இதழ்களின் ஊடே தவழ்ந்தது புன்னகை. 'காதளவோடி சாண்போரின் ஆவியுண்ணும' அவளது கயல் விழிகள் அவனுடைய விலாப்புறத்தைக் கொத்தின.

"மாதவி, நீயா! எப்போது வந்தாய்?" என்று கேட்டான் எழில்.

அவள் அவனையே வைத்த விழி வாங்காமல் பார்த்துக் கொண்டிருந்தாள்.

"உட்காரேன் மாதவி, ஏன் நிற்கிறாய்?" என்றான் எழில் அமைதியுடன்.

"உட்காருவதற்கு வரவில்லை," என்றாள் அவள் கோபத்துடன்.

"பின் நிற்பதற்கு வந்தாயா? சரி நில்!" என்றான் எழில் கேலியுடன்.

"கிண்டல் போதும், கேட்கப் போகும் கேள்விக்குப் பதில் தேவை, நேற்று ஏன் என்னை பூங்காவில் வந்து சந்திக்கவில்லை?"

"மாதவி, மன்னித்துக்கொள். உண்மையாகவே மறந்துவிட்டேன்." அவனுடைய முகத்தைப் பார்க்க மாதவிக்கு பரிதாபமாக இருந்தது. 'பூங்காவில் என்னைச் சந்தியுங்கள்' என்று ஒரு பெண்ணே வலிய வந்து சொல்லும்போது அதை மறந்துவிடும் ஆண்களும் இந்த உலகில் இருப்பதை நினைக்கும் போது அவளுக்கு வியப்பாக இருந்தது.

"மாதவி அப்படி நீ என்னிடம் என்ன சொல்வதற்கு அழைத்தாய்?" என்று வினவியபடி அவள் முகத்தை நோக்கினான். மாதவியின் முகம் நாணத்தால் சிவந்து விட்டது, வெட்கி தலை குனிந்தாள்.

"என்ன மாதவி வெட்கப்படுகிறாய், வெட்கப்படாமல் சொல்."

"நான்......நான்......" என்றாள் மாதவி. அதற்கு மேல் அவளால் பேச முடியவில்லை. குனிந்து கொண்டு கடைக் கண்ணால் அவனைப் பார்த்தாள்.

"சொல் மாதவி........." என்று தூண்டினான் எழில்.

"ஒரு பெண்ணின் மனதை எடை போட எழுத்தாளராகிய உங்களால் கூடவா முடியவில்லை?" என்று இழுத்தாள் மாதவி.

"என்ன மாதவி எழுத்தாளர்களை அவ்வளவு உயரத்தில் கொண்டு போய் வைத்துவிட்டாய். அவனியை அழிக்கக் கூடிய அணு குண்டை கண்டு பிடித்த ஆராய்ச்சியாளர்கள்கூட இன்னும பெண்களின் உள்ளத்தை எடைபோடும் கருவியைக் கண்டு பிடிக்க முடியவில்லையே. சுருக்கமாகச் சொன்னால் வானத்திலே சிதறிக் கிடக்கும் தாரகைகளை எண்ணி விடலாம்—திரை கடலின் உவர்ப்பு நீரை படிகொண்டுஅளந்துவிடலாம்—விண்ணிலே உள்ள

சந்திர மண்டலத்திற்கும் இந்த மண்ணுலகிற்கும் பாலம் கூட அமைத்துவிடலாம். ஆனால் பெண்களின் உள்ளத்தை.........'' என்று கூறிவிட்டு எழில் மாதவியைக் குறும்பாகப் பார்த்தான்.

''போதும் வேதாந்தம்'', என்றாள் அவள் சலிப்புடன்.

''மாதவி, இது வேதாந்தமல்ல! விஞ்ஞானம்'', என்றான். எழில்.

''சரி அதை விடுங்கள், ஒரு பெண் தனக்கு வரப்போகும் கணவனிடம் எதை எதிர்பார்க்கிறாள்'' என்றாள் பத்திரிகைகளுக்கு கேள்வி கேட்கும் ரசிகையைப் போல். ''ஒரு பெண் தனக்கு வரப் போகும் கணவன் பணக்காரனாகவும்—அறிவு இல்லாவிட்டாலும் அழகனாகவும், தன் காலடியில் உலகத்தின் எந்த ஒரு பெண்களி டத்திலுமே இல்லாத புதுவிதப் புடவைத் தினுசுகளாகவும்—பரு ரிஸ் சில்க் ஜாக்கெட்டுகளாகவும், புதுமை வேலைப் பாடமைந்த பொன் நகைகளாகவும் வாழ்வதற்கு வகையான வசதிகள் அமைந்த வானத்தை முட்டும் மாளிகையாகவும்—தன் வாழ்வில் என்றும் எப்போதும் பகட்டும், படாடோபமும்—சுதந்திரமும்—சுக வாழ்வும்—மிளிர வேண்டும் என்றுதான் நினைப்பாள்.''

''பொய்! சுத்தப் பொய்! எல்லாப் பெண்களுமே அப்படி இருக்க மாட்டார்கள்.''

''மாதவி நீ விரும்பமாட்டாயா இந்தப் பகட்டையும் ஆடம் பரத்தையும்.''

''நீங்கள் குறிப்பிட்டது போல் பகட்டும் படாடோபமும்—கணவனை அடக்கியாளும் அறிவற்ற செயலையும் நான் விரும்ப மாட்டேன்,'' என்றாள் மாதவி உணர்ச்சியுடன். ஆனால் உறுதி யாக.

''மாதவி.........மெச்சினேன்! எனக்குத் தெரியும் நீ மிகவும் நல்ல பண்புள்ளவள் என்று. உன் நல்ல குணத்திற்கேற்ற கணவ னுடன் இனிது வாழ்வாய் மாதவி நீ, இனிது வாழ்வாய்,'' என்று வாழ்த்தினான் எழில். அவள் குனிந்து கொண்டாள். ''மாதவி நீ எத்தகைய கணவனை விரும்புகிறாய்?'' என்று ஒரு கேள்வியைத் தூக்கிப் போட்டான் எழில்.

''நான்......நான் விரும்பும் கணவன் அன்புள்ளவராக—ஆண்மையுடன் கூடிய அடக்கம் உள்ளவராக—கவிதை உள்ளம்

படைத்தவராக அறிவின் சிகரமாக......செல்வம் இல்லாவிட்டா லும் சிறந்த குணம் படைத்தவராக இருக்க வேண்டும்'' என்று கூறிவிட்டு, அவனை ஏறிட்டு நோக்கினாள்.

''அத்தகைய கணவனை தேடிவிட்டாயா மாதவி?''

''ஓ! தேடி விட்டேனே,'' என்று புன்னகை பூத்தாள்.

''யார் அந்த அவர்......?''

''அவர்...... என் சிந்தையைக் கவர்ந்த ஒரு எழுத்து வேந் தர்'' என்றாள் அவனை விழுங்கி விடுபவளைப் போல் பார்த்தவாறு.

''ஓ, உன் காதலர் ஒரு எழுத்தாளரா? யார் அவர்?'' என்று வினவினான் எழில் களங்கமற்ற தன்மையுடன்.

''அது...... அது...... நீங்கள்தான் என்று கூறிவிட்டு கண் களை கைகளால் மூடிக் கொண்டாள் மாதவி.

''என்ன, நானா?'' என்று கூறிய எழில் ஒரு வறண்ட வேத னைச் சிரிப்பு சிரித்தான்.

''ஆம்! நீங்கள்தான் என் இதயக் கோவிலின் தெய்வம்,'' என்று தொடர்ந்தாள் மாதவி.

''மாதவி, என்னை மறந்து விடு. வீணே உன்னை ஏமாற்றிக் கொள்ளாதே! நான் உனக்கேற்றவனல்ல,'' என்றான் எழில் நிர் மலமான வான வெளியை நோக்கியபடி, அங்கே இருள் மெல்ல மெல்ல வளர்ந்து கொண்டே இருந்தது.

''உங்களை மறந்து விடுவதா? அணையாத ஜோதியாய் என் உள்ளத்தில் அமைந்துவிட்ட தங்களை மறந்து விடுவதா? முடி யாது எழில்......... முடியாது,'' என்று கூறும்போதே அவள் கண்களில் நீர்த் திவலைகள் திரண்டன.

''மாதவி...... பாலை வனத்திலே நீராட நினைக்கிறாய்,'' என் றான் அவன் அமைதியுடன்.

''பாலை வனமா? இல்லை, இல்லை, இலக்கியச் சோலை,'' என் றாள் உறுதியுடன்.

''மாதவி! நீயோ இளம் பெண். வாழ்க்கை என்பதே இன்ன தென்றறியாத நீ காதல் பேசுவாய் இன்று. ஆனால் நாளை கதறு வாய், கண்ணீர் வடிப்பாய், கலங்கித் துடிப்பாய்.........'' என்று எழில் முடிக்கு முன் மாதவி அவன் வாயை தன் மலர் கையால் மூடி, அத்தான், அப்படிச் சொல்லாதீர்கள்' என்று அழுதாள்.

"மாதவி, இதோ பார்......... நன்ருகப் பார், இலக்கியச் சோலையிலே புகுந்து புறப்பட்ட எனது உடலிலே எஞ்சியுள்ள எலும்புக் கூட்டை—துவழும் உனது உடலை அணைக்கக்கூட சக்தியற்ற இந்த மெலிந்த கைகளை. எழுதி எழுதி அழிந்து போகும் இந்த உடலின் அங்கங்களை. மாதவி நான் உனது இன்ப வாழ்விற்கு உதவாத ஒரு ஜீவன். என்னை மன்னித்து மறந்துவிடு," என்ருன் சோகம் கப்பிய குரலில். "அத்தான்...... நான் காதலிப்பது உங்கள் உடலை அல்ல உள்ளத்தை!" என்று சூளுரைத்தாள் மாதவி.

"மாதவி.........!" என்ருன் எழில் உணர்ச்சி கொந்தளிக்க.

"அத்தான்........."

"மாதவி......... என் மனம் குழம்புகிறது........." என்று தவித்தான் எழில்.

"அத்தான்...... காதல், காதல் என்று காவியம் தீட்டுகிறீர்களே அது வெறும் ஏட்டளவில்தாஞ அத்தான்?" என்று தேம்பிஞள் மாதவி.

"மாதவி! காதலுக்கு மதிப்பளிக்கும் காலமல்ல இது. காதல் என்ருலே அது காமத்திற்குப் போடப்படும் திரை என்று விளக்கம் கூறும் விநோதமான காலம் இது. இந்தக் காலத்தில் காதல் செல்லாக் காசாகிவிட்டது மாதவி," என்று கூறிவிட்டு அவளைப் பரிதாபத்துடன் பார்த்தான் எழில்.

"அத்தான்! செல்லாக் காசாகிவிட்ட காதலுக்கு மதிப்புத் தருவோம் நாம். காதல் புனிதமானது என்பதை நிரூபிப்போம் அத்தான்" என்ருள், அவள் உறுதியுடன்.

"மாதவி...... நம் காதலுக்கு இடையே இருக்கும் அந்தஸ்து பேதமென்னும் அகழிகளை சற்று எண்ணிப் பார்," என்ருன் கவலையுடன்.

"அத்தான், அந்த அகழிகளை நாம் தூற்றுவிட்டால்?"

"அது நம்மால் முடியுமா மாதவி?"

"முயல்வோம் அத்தான் முயல்வோம்......... அகழியைத் தூற்கும் முயற்சியில் தோல்வி நாம் கண்டாலும் அகழியின் ஆழமாவது சற்றுக் குறையாதா?"

"மாதவி! மாதவி! உனக்கு அவ்வளவு உறுதி உண்டா?" என்றான் எழில் வியப்புடன்.

"அத்தான்........."

"மாதவி........."

கொடி இடையாள் துவண்டு சாய்ந்தாள் அவன் மேல். எழில் அவளை அணைத்தபடி சன்னல் அருகே அழைத்துச் சென்றான். அங்கே—நீல வானத்தில் அப்பொழுதுதான் இளம்மதி தன்னுடைய பயணத்தைத் தொடங்கினான். விண் மீன்கள் மெல்ல கண் சிமிட்டத் தொடங்கின.

"அத்தான்........."

"என்ன மாதவி......" என்று அவளுடைய முகத்தை நிமிர்த்தினான் எழில்.

"அதோ வானத்தில் பாருங்கள் குளிர்மதி," என்றாள் உவகையுடன்.

"ஆம் வளர்மதி.........இன்பமே நம் காதல் அரும்பிய இவ்வேளையில் மலர்ந்திருக்கிறது அங்கே அரை மதி."

"அத்தான்! அந்த வளர்மதியைப் போல் நம் காதலும் வளர்ந்து தேய்ந்து விடுமா?" என்றாள் அச்சத்துடன்.

"இல்லை மாதவி, இல்லை! மதியைப் போல் வளர்வதும் தேய்வதுமாக இருக்காது நம் காதல். என்றுமே ஒளி குன்றா ஜோதி நம் காதல்" என்றான் எழில் பெருமையுடன்.

"அத்தான்........."

"மாதவி........."

இருவரின் இடையே உள்ள இடை வெளி குறுகியது. அவன் அணைத்தான். அவள் துவண்டாள். கவிஞன் குனிந்தான். அவள் நிமிர்ந்தாள். சிவந்த அவளது கொவ்வை இதழ்களில் அவன் தன்னுடைய துடிக்கும் உதடுகளைப் பொருத்தினான், காதல் முத்தங்கள் பல பதிந்தன அவள் பளிங்குக் கன்னங்களில். இதைக் கண்டு மரத்துக்கு மரம் தாவும் கிள்ளைகள் இன்பம் கொள்ளையோ கொள்ளையெனக் கத்தின. நீலவானத்திலே பூத்த நிலவும் நட்சத்திரங்களும் 'காதல் அரும்பியது' என 'கல கல' வென்று ஒளி கக்கி நகைத்தன.

தொழுதகை யுள்ளும் படையொடுங்கு மொன்னார்
அழுதகண் ணீரு மனைத்து. —குறள்

# 7. புரியாத புதிர்

அன்று மாதவி தன் வீட்டை அடைவதற்குள் நன்றாக இருட்டிவிட்டது. வானத்தில் கூனப்பிறை இருந்தும் வையகம் இருளில்தான் புதைந்து கிடந்தது. மின்னும் நட்சத்திரங்களால் இருண்ட உலகிற்கு ஒளி தர முடியவில்லை. கருமையில் புதைந்து கிடந்த சாலைகளை சற்றே ஒளி மயமாக்கியது தெரு விளக்குகள். அந்த விளக்கின் துணை கொண்டு வீடு நோக்கி விரைந்துகொண்டிருந்தாள் மாதவி.

வீட்டை அடைந்த அவள் தன் வீட்டில் யாரோ பேசும் ஒலி கேட்டு நின்றாள். பேச்சுக்கிடையில் தன்னுடைய பெயரும் அடிபடுவதைக் கண்டு மறைவில் ஒதுங்கி வீட்டின் உள்ளே பார்வையை வீசினாள். அங்கே—அவளுடைய தாயார் 'தங்கம்' துயரம் தோய்ந்த முகத்துடன் உட்கார்ந்திருந்தாள். அவளுக்குப் பக்கத்தில் உருட்டு விழியும் முறுக்கு மீசையுமாக உட்கார்ந்திருந்தான் 'மன்னார்சாமி.' மன்னார்சாமியைக் கண்டாலே மாதவிக்கு பிடிக்காது. அவளுக்கு அவன் மாமன் முறைதான், ஆனால் அவளோ அவனை ஒரு எதிரியாகவே நினைத்து வெறுத்தாள்.

மன்னார்சாமி மீசையை ஒதுக்கிவிட்டபடி, "தங்கம் யோசனை பண்ணாதே. உன்னுடைய மக்களின் நல்வாழ்வை உத்தேசித்துத்தான் சொல்கிறேன். மாதவி மட்டும் நான் சொல்லும் மனிதனை மணந்து கொண்டால் பின் அவள்தான் இந்த நாட்டிற்கு ராணி என்று சொல்லும் அளவிற்கு பணக்காரியாகி விடுவாள்......" என்று மேலும் ஏதேதோ சொல்லிக் கொண்டு போன அவன், அறையினுள்ளே மாதவி வருவதைக் கண்டு தன்னுடைய பேச்சுக்கு முத்தாய்ப்பு வைத்துவிட்டு அவளை ஏறிட்டு நோக்கினான். அவள் அவன் மேல் ஒரு வெறுப்பு நிறைந்த பார்வையை வீசி

விட்டு உள்ளே போய் விட்டாள். மன்னருக்கு இது ஒன்றும் புதுமையல்ல வழக்கமாக நடப்பதுதான். ஆகவே அவன் அதை பொருட்படுத்தவில்லை.

அந்த அறையில் சிறிது நேரம் அமைதி தவழ்ந்தது. தங்கம் தன் கண்களில் வடிந்த நீரை புடவைத் தலைப்பால் துடைத்த படி 'அண்ணா......,' என்று ஏதோ சொல்ல முயன்றாள். ஆனால் அவளால் ஒன்றுமே பேச முடியவில்லை, தொண்டையில் ஏதோ ஒன்று அடைத்துக் கொண்டுவிட்டதுபோல் தவித்தாள். அவ ளுடைய உள்ளத்திலிருந்து வெளிப்பட்ட விம்மலில் அவளுடைய அகத்திலே அடங்கிக் கிடக்கும் துயரம் எவ்வளவு என்பது விளங் கியது. மன்னர், 'தங்கம! நன்றாக யோசித்துப் பார். எல்லாம் உனது நன்மைக்குத்தான். நான் பிறகு வருகிறேன்,' என்று கூறி விட்டு நடையைக் கட்டினான்.

கதவிடுக்கின் வழியே இவ்வளவையும் கவனித்துக் கொண் டிருந்த மாதவி தங்கத்திடம் வந்து நின்றாள். 'அம்மா! ஏனம்மா அழுகிறீர்கள்,' என்றாள் அவள் கவலையுடன். 'மாதவி......... அம்மா மாதவி......' என்று விக்கி விக்கி அழுதாள் தங்கம். 'அம்மா! ஏனம்மா அழுகிறீர்கள்' என்று பயந்தபடி கேட்டாள் மாதவி. "மாதவி! உன் திருமணத்திற்கு மாப்பிள்ளை தேடி வந் திருக்கிறாரம்மா உன் மாமா......" என்றாள் துயரத்துடன். "அம்மா!" என்று அலறினாள் மாதவி.

மாதவி தன் தாயின் அருகே காலடியில் அமர்ந்தாள், "அம்மா......" என்று எதையோ சொல்லத் துடித்தவள் நாணம் தடுக்கவே, தயங்கினாள். "சொல்லம்மா, என்ன?" என்றாள் அவள் அன்னை. "அம்மா! நான்...... நான்...... ஒருவரை காதலிக்கிறே னம்மா......" என்று ஒருவாறு தட்டுத் தடுமாறி சொல்லி முடித் தாள். "மாதவி!" என்று அன்புடன் அழைத்தவாறு அவள் தலையை வருடினாள் அந்த அன்புத்தாய். "காதலென்ற மயக்கத் தில் கண்மூடித்தனமாக ஏதாவது செய்துவிட்டு உலகத்தின் அப வாதத்திற்கு ஆளாகாதேம்மா" என்றாள் அனுபவம் மிகுந்த அந்த அன்னை. "அம்மா! அவர் மிகவும் நல்லவரம்மா. இருண்ட சமுதாயத்திற்கு ஒளியேற்றும் பணியில் மூழ்கியிருக்கும் எழுத் தின் வேந்தரம்மா அவர்," என்றாள் பெருமையுடன்.

தங்கம் மாதவியின் கூந்தலை வருடியவாறு வானத்தைப் பார்த்தாள் அங்கே—அவள் எதைத் தேடினாளோ தெரியவில்லை. திடீரென்று மாதவி "அம்மா! எங்கள் காதலை துண்டித்துவிட மாட்டீர்களே?" என்றாள் தயங்கியவாறு. தங்கம் மெல்ல சிரித்து, "இல்லை கண்ணே உங்கள் களங்கமற்ற காதலை நான் துண்டாட மாட்டேன். உன் காதலன் நல்லவனாக இருந்தால் போதும்," என்றாள். மாதவி தன் தாயைச் சேர்த்துக் கட்டிக் கொண்டாள். அவள் கண்களில் கரை புரண்டோடியது இன்பக் கண்ணீர். "மாதவி! போம்மா...... போய் படுத்துக்கொள்," என்றாள் தங்கம். மாதவி எழுந்து தன் அறைக்குச் சென்றாள்.

தலையணையில் தலையைச் சாய்த்த மாதவிக்கு தூக்கமே வரவில்லை. புரண்டு புரண்டு படுத்தாள். அவள் எண்ணமெல்லாம் அவளுடைய அன்புத் தாயை நோக்கியே வட்டமிட்டது. மாதவி சிறுமியாக இருக்கும் போதே அவளுடைய தந்தை 'போலீஸ் இன்ஸ்பெக்டராக' இருந்த **'மாணிக்கவேலர்'** தற்கொலை செய்து கொண்டார். அதன் காரணம் இன்று வரை அவளுக்குச் சரியாகத் தெரியாது. அவளுக்குத் தெரிந்தவர்கள், போலீஸ் டிப்பார்ட்மெண்டில், தான் செய்துவிட்ட ஒரு சிறு தவறின் காரணமாக மானம் காக்க மரணத்தைத் தேர்ந்தெடுத்தார் மாணிக்கவேலர் என்றார்கள். மாதவி இதைப் பற்றித் தன் தாயிடம் கேட்க அஞ்சினாள். ஏனென்றால், அந்தப் பேச்சை எடுத்தாலே அவள் விம்மி விம்மி அழத் தொடங்கி விடுவாள்.

அன்பின் உருவான தன் அன்னை—தனக்காகவே வாழும் அந்த அன்புத் தாய்—தன் மகளின் சுகமே தன் சுகமென நினைக்கும் பெருமைக்குரிய மாதா—மன்னார்சாமியைக் கண்டு மட்டும் ஏன் நடுங்கிச் சாகிறாள் என்பதை நினைக்க மாதவிக்கு வியப்பாக இருந்தது. பரம்பரையாக பணக்காரக் குடும்பமாகிய அந்தக் குடும்பத்திற்கு மன்னார்சாமியைப் போன்றார் உதவி தேவை இல்லைதான். ஆனால் மன்னார்சாமி அடிக்கடி வந்து தன் அன்னையை மிரட்டி பணம் பெற்றுச் செல்வதை நினைக்க அவளுக்கு ஆச்சரியமாக இருந்தது. அண்ணன் என்பதால் இப்படி அள்ளி அள்ளி கொடுக்கிறாள் என்றுதான் முதலில் நினைத்தாள் மாதவி. ஆனால் போகப் போக எல்லாம் 'புரியாத புதிராக'வே இருந்தது அவளுக்கு.

அறன்கடை நின்ருரு ளெல்லாம் பிறன்கடை
நின்ருரிற் பேதையா ரில் —குறள்

# 8. கண்ணன்

ஆடி வரும் வேலுக்கும்—எதிர்த்து வரும் வாளுக்கும் மார்பு காட்டி பகைவனே புறமுதுகிட்டு ஓடும்படி வாட்டி, குதிரைகளின் குளம்படியில் சிக்கி, வேழத்தினிடம் வீரப்போர் நிகழ்த்தி வெற்றி எமது!' என்று வீரத்துதி பாடி வாகைமாலே சூடி வரவேற்கக் காத்திருக்கும் காதலியைத் தேடி விழுப்புண் பெற்ற மறவன், குருதி வடியும் மார்பை தோகை மயிலாளுக்குக் காட்டி 'வந்து விட்டேன் வனிதையே' என்று கூறுவதைப் போல் வானத்திலே வைகறையோன் தன்னுடைய சிவந்த உடலைக் காட்டிப் புறப்பட்டான். காதலனே கண்டதும் நகைமுகம் காட்டி இதழ் விரித்துச் சிரிக்கும் காதலியைப் போல் கதிர்க்கோமானின் சிவந்த மேனி கண்டு மலர்ந்தன மலர்கள். சேவல் உடனே 'இருளரக்கனே போரில் வென்ற 'கோ'வே 'வருக, வருக' வென துந்துபி முழங்கியது. குவலயமெங்கனும் புத்தொளி.

பகலோன் வானத்தில் கால்பாகத்தை அளந்து கொண்டிருந்தான். அப்போது மல்லிகா சன்னலில் வந்து நின்றவாறு எதிரே உள்ள சன்னலே நோக்கினுள். அவள் உடலைச் சிவப்பு வர்ணச் சோளியும் 'பிளீடட்' நைலான் புடவையும் அழகு படுத்திக் கொண்டிருந்தன. கைகளில் மஞ்சள் நிறக் கண்ணுடி வளையல்களும் அவ் வளையல்களின் இரு கோடியிலும் பொன் வளையல்களும் அணிந்திருந்தாள். காந்தள் மலரைப் போன்ற மெல்லிய விரல்களால் சன்னலின் கம்பிகளே லாகவமாக வருடியவாறுகுவளே மலரைப் போன்ற மையுண்ட கண்களால் எதிரே உள்ள சன்னலுக்கப்பால் நின்று கொண்டிருந்த அவனே அந்த 'எங்கிருந்தோ வந்தவனே' பார்த்துக்கொண்டிருந்தாள். அவனும் அவளேயே விழுங்கி விடுவது போல் பார்த்துக் கொண்டிருந்தான்.

அவன் அவளேப் பார்த்து மெல்ல சிரித்தான். அவளுக்கு என்ன செய்வதென்றே புரியவில்லே. அவளே அறியாமல் அவ

ளுடைய இதழ்கள் ஒரு எழில் நிறைந்த புன்னகையை உதிர்த்தன. அவன் அவளை கவலையுடன் பார்த்தவாறு சிறிது நேரம் தயங்கி நின்றான், பின் சன்னலைச் சாத்தினான். மல்லிகா திகைத்து விட்டாள். ஆனால் சிறிது நேரத்திற்குள் அவன் கையில் பள்ளிப் புத்தகங்களுடன் அந்த வீட்டைவிட்டு வெளியே வருவதைக் கண்டதும் அவள் மனதில் நிம்மதி நிறைந்த பெருமூச்சு ஒன்று வெளிப் பட்டது.

அவன் நடந்து கொண்டே அவளைப் பார்த்தான். அவளும் பார்த்தாள். இருவரின் பார்வையும் ஒன்றையொன்று தழுவிப் பின் பிரிந்தன. அவன் கண்ணுக்கு மறையும் வரைப் பார்த்துக் கொண்டு நின்றாள் மல்லிகா. அவள் மனதிலே ஒரே புகைச்சல். அவளுடைய தளிர் உடலை 'காமத்'தனல் சுட்டுப் பொசுக்கிக் கொண்டிருந்தது. அவள் மனதிலே, "நீ செய்வது சரியா?" என்று எழும்பிய வினாவிற்கு அவளால் விடை காண முடியவில்லை. நிம்மதியற்ற உள்ளத்திற்குச் சிறிது அமைதியாவது கிடைக்குமென்ற நம்பிக்கையுடன் 'புத்தக; அறையை அடைந்தாள். அங்கே 'அறிஞர் அண்ணா', 'டாக்டர் மு. வ.' ஆகியோரின் அறிவு நூல்களும் 'எமிலிசோலா', 'காண்டேகர்' ஆகியோரின் மொழி பெயர்ப்பு நாவல்களும் அழகாக அடுக்கி வைக்கப்பட்டிருந்தன. அவளுடைய கண்கள் 'தலையணை' போன்ற ஒரு பெரிய புத்தகத்தின் மேல் இலயித்தது. அதைக் கையில் எடுத்தாள். அந்தப் 'பெரிய' நூலின் அட்டையைப் புரட்டினாள். அது ஒரு புராண இதிகாசங்களின் தொகுப்பு நூல். அதை மேலும் புரட்டினாள். தெய்வீக நூலைப் படித்தால் மன அமைதியும் உள்ளத் தூய்மையும் கிட்டுமென்று அவள் நினைத்தாள். ஆனால்—அந்த தெய்வீக நூலைப் படிக்கப் படிக்க அவளுடைய விரகதாபம் பெருகியதே தவிர குறைய வில்லை. தருமனுக்கு மனைவி பாஞ்சாலி. அவள் ஐவருக்கும் அழியாத பத்தினி என்பதை படிக்கும் போது அவளுடைய உள்ளத் திலே ஆபாசமான கற்பனைகள் கரை புரண்டோடினது.

பத்தினி தெய்வம் பாஞ்சாலி. அவள் புகழ் பரப்ப கோவில் கள்—நிலை ஓத உபன்யாச பாகவதங்கள்—என்று பல வகையில் அவளுடைய வரலாற்றை பறை சாற்றுகிறார்கள். அவளைப் போல் எல்லோரும் வாழ வேண்டுமென்று வாழ்த்துகிறார்கள். ஆனால் 'அவளுடைய உயரிய சிறந்த கொள்கையை இந்தக் காலத்தில் யாராவது பின் பற்ற முன் வந்தால் அவளுக்குக் கொடுக்கப்படும்

பெயர் விபசாரி' என்று பற்பல எண்ணங்களை எண்ணினுள். "மனித சக்திக்கு அப்பாற்பட்ட, மனிதர்களுக்கும் மேலான தெய்வங்களே இத்தகைய கீழான வாழ்க்கை நடத்தியிருக்கும் போது நானும் ஏன் அவர்களைப் போல்..........." என்று அவளுடைய மனக் குரங்கு பேயாட்டமாடியது.

அன்று பிற்பகல் மணி மூன்றிருக்கும். பள்ளிக்குச் சென்றிருந்த அவன் 'எங்கிருந்தோ வந்தவன்' வீடு திரும்பிவிட்டான். கையில் ஒரு நாவலை எடுத்துக் கொண்டு மல்லிகாவின் வீட்டிற்குப் பின்புறமுள்ள பூந்தோட்டத்தில் போய் அமர்ந்தான் அவன். அவனுடைய விரல்கள்தான் நாவலின் ஏடுகளைப் புரட்டினவே தவிர அவனுடைய எண்ணமெல்லாம் எங்கோ இலயித்துவிட்டது. மல்லிகா தக்க சமயமென அவனை நெருங்கினுள். அவனருகே செல்ல அவளுக்கு வெட்கமாய் இருந்தது. மெல்ல அடி ஓசை கேட்காதவாறு அவனிடம் போய் சிறிது தொலைவில் நின்றவாறு அவனையே பார்த்துக் கொண்டிருந்தாள். அவள் நிற்பதை அவன் கவனிக்கவில்லை.

அவன் எழுந்து இங்குமங்கும் மெதுவாக நடந்தான். நடந்து கொண்டிருந்த அவன் 'ஆ' வென்று அலறினுன். மல்லிகா பதை பதைத்து அவனுக்கு அருகில் ஓடினுள். அங்கே—அவனுடைய காலில் ஒரு முள் தைத்திருந்தது. அவனுடைய பாதங்களிலிருந்து வடிந்த சிவப்பு இரத்தம் அங்கே தரையில் கிடந்த சிறிய வெள்ளை மலர்களை சிவப்பு மலர்களாக்கியது. மல்லிகா அவனை அனுதாபத்துடன் பார்த்தாள். அவன் அவளைப் பரிதாபத்துடன் நோக்கினுன். மல்லிகா மெல்ல அவனருகில் உட்கார்ந்தாள். அவன் கண் இமைக்காது அவளையே பார்த்துக் கொண்டிருந்தான். அவள் அவனுடைய காலில் தைத்திருந்த முள்ளை பிடுங்கினுள். இரத்தம் குமிழியிட்டது. அவள் தன்னுடைய புடவைத் தலைப்பைக் கிழித்து அவனுடைய இரத்தம் வடியும் காலில் கட்டினுள்.

அவன் அவளை நன்றியறிதலுடன் பார்த்தான். அவள் மெல்ல சிரித்தாள். "இப்பொழுது எப்படி இருக்கிறது?" என்ருள் மல்லிகா அக்கரையுடன். "உங்களுடைய கை பட்டதுமே வலியெல்லாம பறந்துவிட்டது" என்ருன் அவன். அவனுடைய துடுக்குத்தனமான பதிலைக் கேட்டதும அவளுக்கு உடல் புல்லரித்தது. அவன் அவளையே பார்த்துக்கொண்டிருந்தான். அவளால் அவனுடைய கண்களை ஊடுருவிப் பார்க்க முடியவில்லை. அவன்

தன் கையிலிருந்த 'நாவலை' அவளிடம் நீட்டினான் "எனக்கு நீங்கள் அளித்த முதலுதவிக்காக எனது அன்பளிப்பு" என்று கூறிய வாறு. அவள் நடுங்கும் கரங்களை நீட்டினாள். 'நாவல்' தரையில் விழுந்தது. அவள் சட்டென்று குனிந்தாள், அவனும் குனிந்தான். அவளுடைய முகமும் அவனுடைய முகமும் ஒன்றை ஒன்று தழு வின. அவள் திடுக்கிட்டு நிமிர்ந்தாள். அவளுடைய தங்க உடலில் வேர்வை துளிர்த்தது. அவன் தன் கையிலிருந்த 'நாவலை' அவ ளிடம் நீட்டினான். அவள் அதை வாங்க கையை நீட்டினாள். அவன் 'நாவலை' அவள் கையில் வைத்தவாறு அவளுடைய விரல் களைப் பற்றினான். அவள் கையை உதற விருப்பம் இல்லாமல் மெல்ல விடுவித்துக் கொண்டு வீட்டின் உள்ளே ஓடிவிட்டாள்.

கையிலிருந்த 'நாவலை' மார்புடன் அணைத்தவாறு பஞ்சணை யில் சாய்ந்தாள். அவளுடைய உடலில் இன்ப அலைகள் மோதி ஆர்ப்பரித்தன. 'நாவலின் முதல் அட்டையைப் புரட்டினாள். அங்கே அழகான முத்து எழுத்துக்களால் 'கண்ணன்' என்று எழுதப்பட்டிருந்தது. அவளுடைய வாய் 'கண்ணன், கண்ணன்' என்று முணகியது. நாவலை மேலும் புரட்டினாள். அவளுடைய கண்கள் வியப்புடன் மலர்ந்தன. ஏனென்றால் அந்த நாவலின் பெயர் 'நீ என் காதல் தெய்வம்' என்பது. அவள் மெல்லச் சிரித் தாள். அவள் வாழ்வில் என்றும் அவள் காணாத இன்பத்தைக் கண்டாள். அவள் எண்ணமெல்லாம் கண்ணனைத் தேடியே ஓடி யது.

அன்போ டியைந்த வழக்கென்ப ஆருயிர்க்<br>
கென்போ டியைந்த தொடர்பு —குறள்

# 9. பயங்கர மர்மம்

மலர்க் காட்டினூடே மருவி வந்த தென்றல் காற்று மரங் களில் மோதிய காரணத்தால் மகிழம் பூக்கள் உதிர்ந்தன மாதவி யின் மேல். அவள் உள்ளம் உவகையால் துள்ளிக் குதித்தது. ஏக் கத்துடன் வழியின் மேல் விழியை ஓட்டினாள். அங்கே—அவள் காதலன் எழில் இன்னும் வருவதாக சுவடு தெரியவில்லை.

தென்றலைத் தழுவிய மலர்கள் இதழ் விரித்து ஆடின. அப்போது எங்கிருந்தோ பறந்து வந்த தும்பி ஒன்று மலரில் வடியும் தேனை சுவைப்பதைக் கண்டாள் மாதவி. அவளுக்கு அன்று நடந்த ஒரு சம்பவம் நினைவிற்கு வரவே நாணம் மிகக் கொண்டாள் மாதவி. அவள் உள்ளத்தைக் கீறிக்கொண்டு வெளிப்பட்டது இசை. அது வீணையின் நாதம் போல் அப் பூங்காவில் எதிரொலித்தது; 'சோலையிலோர் நாள் எனையே

தொட்டிழுத்து முத்த மிட்டான்
துடுக்குத் தனத்தை என் சொல்வேன்!
மாலைப்பொழுதில் இந்த மாயம்புரிந்த செம்மல்
வாய்விட்டுச் சிரித்துப் பின்
போய்விட்டானேடி தோழி!'

என்று மரமொன்றை தோழியாகப் பாவித்து பாட்டிசைத்தாள் மங்கை மாதவி. அந்தத் தேன் மதுர இசையை அவளுக்குப் பின்னின்று ரசித்த எழில், 'என்ன மாதவி, யாரந்த துடுக்குக் காரன்?' என்றான் கிண்டலாக. "யாரா?" என்று அவனைக் குறும்பாக பார்த்தபடி அவனுடைய கன்னத்தைத் தட்டிவிட்டு மானைப் போன்ற விழியாள் சிட்டைப் போல் ஓடினாள். அவன் துரத்தினான்—அவள் ஓடுவதை நிறுத்தி திரும்பினாள். அவன் நெருங்கி அவளுடைய தாவணியைப் பற்றினான். அவள் மீண்டும் ஓடினாள். அவளுடைய தாவணி நழுவியதால் 'முகிலைக் கிழித்து வெளிக் கிளம்பும முழுமதி' என்று கவிதை தீட்டினாரே புரட்சிக் கவிஞர், அந்தக் கவிதையின் உண்மையை அவன் அங்கே நேரில் கண்டான்.

"உஸ்...... அய்யோ, தாவணியை விடுங்கள்...... யாராவது பார்க்கப் போகிறார்கள்" என்று அவள் அவனை நெருங்கி அவன் கையில் சிக்கிய தாவணியைக் கைப்பற்ற முயன்றாள். அவன் அவளுடைய கரங்களை இறுகப் பற்றினான். அவள் துவண்டு அவனுடைய மார்பிலே சாய்ந்தாள். அவன் அவளுடைய முகத்தை நிமிர்த்தினான். அவனுடைய அஞ்சனம் தீட்டிய இமைகள் புறாவின் சிறகுகளைப் போல் 'படபட' வென அடித்துக் கொண்டன. எழிலன் மாறாத ஆசையுடன் "மாதவி......" என்றான். அவள் பவள வாய் திறந்து "அத்தான்......' என்றாள். அவன் கட்டு மீறிய காதல் போதையுடன் அவளுடைய இதழ்களில் தன்னுடைய உதடுகளைப் பதித்தான்.

"அத்தான்......!"

"மாதவி........."

"அத்தான்...... அழிந்து விடுமா நம் காதல்?"

"கரும்பே! நம் காதல், செடியில் பூத்துக் கருகிவிடும் மலரல்ல...... என்றென்றும் மங்காத சுடர்வீசும் துருவ நட்சத்திரம கண்ணே! நம் காதல் வெறும் காமமல்ல, பண்பட்ட உள்ளத்திலே பிறந்த தெய்வீக பாசம். மாதவி...... தமிழ்த் தாயின் கழுத்திலே சுடர் வீசும் இலக்கிய மாலையாம் 'சிலப்பதிகாரத்தில்', என்றும் மறையாத இடத்தைப் பெற்றுவிட்ட கலைமகள்-கற்புக்கரசி 'மாதவி'யைப் போல் நீயும் என்றும் என் மனதிலே...... அழியாத எனது இதயக் கோவிலிலே மறையாத இடத்தைப் பெற்றுவிட்டாய்......மாதவி...... நீதான் என் உயிர்," என்று அவளை அணைத்துக் கொண்டான் எழில்.

எழிலின் அணைப்பிலே தன்னை மறந்தாள் மாதவி. 'அத்தான்......! என்றைக்கும் உங்களுடனேயே இருப்பேன். நீங்கள் தான் என் தெய்வம்......" என்றுள் அவள் அவனுடைய மார்பிலே முகத்தைப் புதைத்தவாறு.

காதலர் இருவரும் கருத்தொருமித்து தங்களை மறந்து ஒருவரையொருவர் அணைத்துக் கொண்டிருக்கும் அவ்வேளையில் கரும்புக் கொல்லையில் புகுந்த களிறைப்போல் பிளிறிக் கொண்டு அங்கே தோன்றினுன் மன்னுர்சாமி. காதலர் திகைத்தனர்.

மன்னுரின் கண்கள் வெறி பிடித்த ஓநாயின் கண்களைப் போல் அனலை கக்கின. "டேய்! அயோக்கியப் பயலே......" என்று தன்னுடைய இடிக்குரலால் முழங்கினன் மன்னுர்சாமி. மாதவி அவனை எரித்து விடுவதைப் போல் பார்த்தாள். "என்னடி முறைக்கிருய்? திமிர் பிடித்தவளே" என்று உறுமினன் அந்த முரடன். "நிறுத்து! நீ யார் எங்கள் விஷயத்தில் தலையிட?" என்றுள் அவள் படபடத்த குரலில். "நான் யாரா......?" என்று பயங்கரமாகச் சிரித்தான் அந்த வெறியன். அவனுடைய வெறிச் சிரிப்பைக் கேட்டு மாதவியின் தாய் தங்கம் அங்கே ஓடி வந்தாள்.

"டேய்! சோனிப் பயலே...... திரும்பிப் பார்க்காமல் ஓடு. இனி இந்தப் பக்கம் தலை வைத்துப் படுத்தால்கூட தோலை உறித்து விடுவேன்" என்றுன் மன்னுர் எழிலைப் பார்த்து.

"தோழரே! உமது தீரச் செயல்களை விளக்க கசாப்புக்கடை தான் சிறந்த இடம். காதலர்களின் வாழ்வல்ல......" என்றான் கிண்டலாக. "ஆ! என்ன சொன்னாய்?" என்று உறுமினான் மன்னார்சாமி.

"டேய் ஓடு இந்த இடத்தைவிட்டு," என்று தன் கையிலிருந்த சவுக்கால் எழிலை மாறி மாறி அடித்தான் மன்னார். மாதவி சீறும் சிறுத்தையாக மாறி அவன் மேல் பாய்ந்தாள். ஆனால் மதம் பிடித்த வேழமாக மாறிவிட்ட மன்னார், அவளைப் பிடித்து வேகமாகத் தள்ளினான். கொடியிடையாள் விலகிப்போய் விழுந்தாள். மன்னார் ஆத்திரம் தீர எழிலைப் புடைத்தான். தங்கம் ஒன்றும் செய்யத் தோன்றாது கைகளை பிசைந்து கொண்டு நின்றாள். எழிலின் உடலிலிருந்து இரத்தம் கசிந்தது. பாவம்–அறிவைப் பாவிக்காமல் உடலை அப்பாவித்தனமாக வளர்த்து வைத்திருக்கும் மன்னாரின் முன் அறிவுப் பயிற்சி செய்வதன் மூலம் உடலைத் துரும்பாக்கிக் கொண்ட எழில் என்ன செய்ய முடியும்.

"வெறி பிடித்த பேயனே! நீ யாரடா எங்கள் வாழ்வில் குறுக்கிட, முட்டாளே, மிருகமே!" என்று மறுபடியும் மன்னாரின் மேல் பாய்ந்தாள் மாதவி. அவன் பயங்கரமாகச் சிரித்தான். மன்னாரின் ஒவ்வொரு சிரிப்பும் அவளுடைய ஆத்திரத்தை அதிகமாக்கும் கருவியாக மாறின. ஓங்கி ஒரு அறை கொடுத்தாள் மாதவி. மன்னார் சிவந்து போன கண்களை உறுட்டி அவளைப் பார்த்தான். தங்கம் ஓடிவந்து மாதவியை அழைத்துக் கொண்டு வீட்டிற்குள் போய்விட்டாள். மன்னாரின் வெறிச் சிரிப்புத் தொடர்ந்து கேட்டுக் கொண்டே இருந்தது.

"அம்மா, ஏனம்மா அந்த மிருகத்திற்கு பயப்படுகிறீர்கள். சொல்லுங்களம்மா...... சொல்லுங்கள்" என்று மாதவி தன் தாயின் காலைப் பிடித்துக் கொண்டு கெஞ்சினாள். அவளோ விம்மி விம்மி அழுதாள். "அம்மா, சொல்லுங்களம்மா......" என்று கேட்டாள் மீண்டும். அப்போது வெறிச் சிரிப்புடன் அங்கே தோன்றிய மன்னார், "மாதவி, உன் தாயாரால் சொல்ல முடியாத அந்த மர்மத்தை நான் சொல்கிறேன் கேள். உன் அன்னை எனக்காக அஞ்சி நடுங்கவில்லை! இதோ பார் இதற்காகத்தான் அவள் அஞ்சுகிறாள்......" என்று கூறியவாறு ஒரு 'கவரை' எடுத்துக் காட்டினான். அந்தக் 'கவரை'க் கண்ட தங்கம் கீரியைக் கண்ட

நாகத்தைப் போல் நடுங்கினுள். மன்னர் தொடர்ந்து பேசினுன், "மாதவி! அதோ பார் உன் அன்புத் தாய் நடுங்கிச் சாவதை. இந்தக் கடிதத்தில் உள்ள ஒவ்வொரு எழுத்துக்களும் உங்கள் வாழ்வைக் குலேக்கும் ஒரு 'துளி விஷம்' என்பதை நினைவில் வைத்துக்கொள். இனிமேலாவது நீயும் உன் தாயும் என் அடிமைகள் என்பதை உணர்ந்து கொள்" என்று கூறிவிட்டு வெளியேறினுன் மன்னர். தங்கம் மயங்கி, கீழே சாய்ந்தாள். மாதவி அவளைத் தாங்கிக் கொண்டாள். வீட்டினுள்ளே புயல்—பூகம்பம்—எரிமலை—வீட்டின் வெளியே, பின்புறம தோட்டத்தில் கசையடிபட்ட எழில் மெல்ல எழுந்தான். அவனுடைய உடலி லிருந்து வடிந்தது சிவப்பு இரத்தம். அவனுடைய பரிதாப நிலையைக் கண்ட பகலோன் வேதனை தாங்காது இரத்தக் கண்ணீர் வடித்தவாறு மேற்றிசையில் இறங்கிக் கொண்டிருந்தான். வானமெல்லாம் செந்நிறமாய் மாறியது அவனுக்காகவா அல்லது மாதவியின் தாய் தங்கத்தின் 'பயங்கர மர்மத்தை' நினைத்தா என்று தீர்மானிக்கும் முன்னம் கதிரோன் மறைந்தான்.

**கனவினு மின்னுது மன்னே வினைவேறு**
**சொல்வேறு பட்டார் தொடர்பு —குறள்**

# 10. சதி சிரித்தது

பகலோனின் ஒளி எழிலின் முகத்தில் 'சுரீர்' என்று சுட்டதும் அவன் கண் விழித்தான். உடலெல்லாம் ஒரே அசதியாக இருந்தது. மெல்ல எழுந்தான். அவனுடைய உடலிலே ஏற்பட்ட கசையடிப் புண்கள் அனலாய் எரிந்து அவனைத் தகித்தது. உடல் வலியையும் பொறுத்துக்கொண்டு எப்படியோ பத்திரிகை அலுவலகத்தை வந்தடைந்தான். அவன் படிக்கட்டில் ஏறும்போதே 'ஆபீஸ் பையன்', "சார் உங்களை மானேஜர் பார்க்க வேண்டுமாம்," என்ருன் கலவரத்துடன். எழில் எந்தவித பதட்டமும் இன்றி மானேஜரின் பிரத்தியேக அறையினுள் நுழைந்தான்.

அங்கே-மானேஜர் கண்ணபிரான் உட்கார்ந்திருந்தார். எழிலைக் கண்டதும் கண்ணபிரான் "வா எழில்! உட்கார்" என்று உபசரித்தார். எழில் அவரை ஏறிட்டு நோக்கினன். "எழில்! உன்னிடம் ஒரு முக்கியப் பிரச்னையைப் பற்றி பேச வேண்டும்" என்ருர் கண்ணபிரான். "எதைப் பற்றி" என்ருன் எழில் சிறிது தயங்கியபடி. "எழில்! அந்த விஷயம் உனக்குத் தெரியாமல் இருக்காது. சுருக்கமாகவே சொல்கிறேன், நீ வீணே என் விவகாரங்களில் தலையிடுகிருய்" என்ருர் சற்று கோபமாகவே. "விளங்கவில்லையே" என்ருன் எழில் திகைப்புடன். "எழில்! நீ மாதவியை மறந்துவிட வேண்டும் என்ருர் கண்டிப்பான குரலில் "சார் அது என் சொந்த விஷயம்" என்ருன் எழில் துடுக்காக. "எழில் வீணுக தவறு செய்யாதே......அவள்......" என்று கண்ணபிரான் முடிக்கு முன் ".........என் காதலி" என்ருன் எழில். "ஆனல் வெகு விரைவில் என் மனைவியாகப் போகிறவள் என்று குத்தலாக பேசினர் கண்ணபிரான். "என்ன?" என்று பதறினன் எழில். இப்போதாவது தெரிந்துகொள். இனி மேலாவது திருத்திக்கொள் உனது போக்கை" என்று கூறினர் கண்ணபிரான்.

"ஆம் திருத்திக் கொள்ளுங்கள் உங்கள் முடிவை. நாட்டிலே சீர்திருத்த முரசமறையும் ஏட்டின் கௌரவ ஆசிரியர். சமாதான நீதிபதி என்ற பட்டத்தை ஏந்திக் கொண்டிருக்கும் தாங்கள்—பேரன் பேத்திகளை எடுத்துக் கொஞ்ச வேண்டிய வயதிலே பேதை ஒருவளின் வாழ்வுடன் விளையாடுவது அறியாமை. அய்யா...... வேண்டாம் இந்த விபரீதம். நானும் அவளும் வீணையும் நாதமும்போல இரண்டரக் கலந்துவிட்டோம். எங்கள் காதலை துண்டாடாதீர்கள்" என்ருன் வினயமாக.

"எழில்! யாரிடம் பேசுகிருேமென்று நினைத்துப் பார். ஏடு தாங்கியாகிய உன்னை நாடு போற்றும் எழுத்து வேந்தனுக்கிய நான் கட்டளையிடுகிறேன். அவளை மறந்துவிடு," என்ருர் கண்ணபிரான் இறுமாப்புடன்.

"தாங்கள் என் எழுத்திற்கு ஆக்கமளித்ததை நான் என்றும் மறக்கமாட்டேன். ஆனல் அதற்காக என் இதயம் கவர்ந்தவளை மறந்துவிடும்படி தாங்கள் சொல்வது மிகக் கொடியது" என்ருன் எழிலன்.

"எழில்! நீ அவளை மறக்கத்தான் வேண்டும்."

"முடியாது அவளை நான் மறக்க முடியாது. ஏனென்றால் என்றும் மறக்காத வகையில் அவள் என் உள்ளத்தில் இடம் பெற்று விட்டாள்."

"சீ! நன்றி கெட்டவனே. எழுத்துலகில் புகுந்து அங்கே வறுமைப் புயலில் சிக்கி உயிருடன் போராடிக் கொண்டிருந்த உனக்கு வாழ வழி வகுத்துக் கொடுத்து, ஒப்பற்ற உனது திறமைக்குத் தக்க பரிசாக பொருப்புள்ள பதவியை அளித்து உன்னையும் ஒரு மனிதனுக உலகில் நடமாட வசதி செய்து கொடுத்த எனக்கு நல்ல கைமாறு செய்கிருய்," என்று சீறினார் சிறுத்தையைப் போல் கண்ணபிரான்.

அவருடைய பேச்சைக் கேட்ட எழில் மெல்ல சிரித்தான். "ஓடும் ஆற்று வெள்ளத்திலே வழுக்கி விழுந்தவனை காப்பாற்றி கரை சேர்த்த பின், உன் உயிரை காப்பாற்றி விட்டேன் அதற்கு பிரதி உபகாரமாக ஒளி வீசும் உனது கண்களை எனக்குத்தா, என்று கேட்பது போல் இருக்கிறதய்யா உமது செயல்" என்ருன் எழில் சினத்துடன்.

"நிறுத்து! எனக்கே போதிக்க வந்துவிட்டாயா? மடையனே, போ வெளியே. இன்று முதல் உன்னை 'டிஸ்மிஸ்' செய்கிறேன். நன்றி கெட்டவனே போ...... போய் எழுத்துத் திறமையை கையில் வைத்துக் கொண்டு பணம் இல்லாத காரணத்தால் நொந்து மடியும் எழுத்தாளர் கும்பலில் சேர்ந்து ஒழிந்து போ," என்று கத்தினர் பிரான். எழில் சிரித்தான். ஆம், வாய்விட்டுச் சிரித்தான் சிரித்துக் கொண்டே வெளியேறினுன்.

எங்கெங்கோ சுற்றிய எழிலின் மனம் அலைவீசும் கடலாக மாறியது. கலங்கிய மனதுடன் உலவினுன். நிம்மதி தேடி பூங்காவினுள் நுழைந்தான்—அங்கே தென்றல் அவனுக்கு நெருப்பாகப் பட்டது. அமைதி தேடி கடற்கரைக்குச் சென்ருன். அங்கே கால்களை வந்து தழுவிய அலைகள்— கொதிக்கும் நீராகத் தோன்றின அவனுக்கு. செக்கர் வானத்திலே மறைந்து கொண்டிருந்த கதிரோன் அவனுடைய கண்களை வேலாகத் தாக்கவே வேதனை மிகக் கொண்டான். உடனே வீடு நோக்கி நடந்தான். நடந்து செல்லும் அவனுக்கு வழியில் வஞ்சக கண்ணபிரான் விரித்திருக்

கும் சதி வலையைப் பற்றி ஒன்றுமே தெரியாது. ஒரு இருண்ட இடத்தை எழில் நெருங்கியதும் அங்கே வளர்ந்திருந்த வான லாவிய மரங்களின் மேலிருந்து 'தட தட'வென குதித்த நான்கு ஐந்து முரடர்கள் எழிலை தடி கொண்டு தாக்கினர். நையப் புடைக்கப்பட்ட எழிலின் தலையில் 'தடியன்' ஒருவன் தடி ஒன்றை சாடினான். செங்குருதி கொட்டும் தலையை பிடித்துக் கொண்டு தரையில் சாய்ந்தான் எழில்.

அவனைச் சூழ்ந்து நின்ற முரடர்கள் மறைந்து விட்டார்கள். எழிலனின் தலையிலிருந்து வடிந்த இரத்தம் தரையில் உறைந்து மண்ணை செந்நிறமாக்கியது. அவனுடைய உடல் நினைவு தப்பி துவண்டு கிடந்தது. வீதியின் ஓரத்திலே, களங்கமற்ற அவனுடைய முகத்திலே இரத்தக் கோடுகள் விகாரமான வடுக்களை ஏற்படுத்தின. அந்த வடுக்களின் ஊடே வஞ்சகன் கண்ணபிரான் இழைத்த 'கொடுமையும் சதியும் பயங்கரமாக சிரித்தன.'

பிறன்பொருளாட் பெட்டொழுகும் பேதைமை ஞாலத்
தறம்பொருள் கண்டார்க ணில் —குறள்

# 11. உள்ளக் கொதிப்பு

அன்று சனிக்கிழமை. ஆனாலும் வானத்தில் ஞாயிறு என்றும் போல் அன்றும் தன் இரத்தக் கண்களால் இருளை வெறித்துப் பார்த்து விரட்டியடித்தபடி முன்னேறிக் கொண்டிருந்தான். வழக்கம் போல் கடிகாரத்தின் முள் பல எண்களைத் தாண்டி எட்டில் வந்து நின்றது. மல்லிகா கண்ணாடியின் முன் நின்று தன்னை அலங்கரித்துக் கொண்டிருந்தாள். கடைந்தெடுத்த தங்கச்சிலை போன்ற அவளது ஒவ்வொரு அங்கங்களிலும் இளமை நர்த்தனமாடியது. வானவில்லை தோற்கடிக்கும் அவளது இரண்டு வளைந்த புருவங்கள்—வண்டினத்தை ஏளனம் செய்யும் வட்டக்கரிய விழிகள்—கமலமலர்களைப் பழிக்கும் கொவ்வை இதழ்கள்—கார் மேகத்துடன் போர் தொடுக்கும் கூந்தல்—முல்லையரும்புகளை முறியடிக்

கும் முத்துப் பற்கள்—கொடி அன்ன இடை—போர்வாளைவிட கூர் மையான மார்பகங்கள். மொத்தத்தில் அவள் ஒரு அழகுப் பெட் டகமாகத் திகழ்ந்தாள். அவளுடைய கண் வீச்சும்—இதழ் சிந்தும் புன்னகையும்—துவளும் இடையின் அசைவும் எகிப்து நாட்டு எழிலரசி 'கிளியோப்பாட்ரா'வை நினைவுபடுத்தின.

தன் அழகில் தன்னையே பறி கொடுத்தவாறு மெய் மறந்து மயங்கிக் கிடந்த மல்லிகாவின் கண்களை இரண்டு கரங்கள் பொத்தின. அவள் அந்த இரண்டு கரங்களையும் மெல்ல விலக் கினாள். அங்கே—கண்களை சிமிட்டியவாறு நின்று கொண்டிருந் தான் கண்ணன். அவள் அவனைப் பார்த்து கன்னங்குழியச் சிரித் தாள். அவளுடைய மையுண்ட கண்கள் மயக்குமொழி பேசின. கண்ணன் மெல்லக் குனிந்தான், அவளுடைய இதழ்களை தன் னுடைய உதடுகளுக்குக் குறிவைத்து. மல்லிகா அவனுடைய கன் னத்தை செல்லமாகத் தட்டிவிட்டு எழுந்து ஓடினாள். அவன் துரத்தினான். ஓடிய மல்லிகா அவன் கையில் சிக்கினாள். அவன் அவளுடைய வளைக்கரத்தைப் பற்றி இழுத்தான் அவள் பஞ் சணையில் சாய்ந்து 'கல கல'வென சிரித்தாள். கண்ணன் அவளரு கில் அமர்ந்தான். அவள் விரகதாபம் மேலிட அவனை கண்களால் கொத்தினாள். அவன் அவளுடைய மலரன்ன எழில் முகத்தை இரு கைகளாலும் அணைத்துக் கன்னங்களில் முத்தமிட்டான்.

தன் ஊது குழலில் இசை எழுப்பி கன்னியரின் கருத்தைக் கவர்ந்து பின் அவர் தம் கற்பைக் கெடுத்து—இளம் பெண்கள் நீராடும் போது அவர்களின் கலிங்கத்தைக் கவர்ந்து மரத்தின் மேல் ஏறிக் கொண்டு 'மங்கையரே, உங்கள் கொங்கைகளைக் காட்டி கைகூப்பித் தொழுதால்தான் தருவேன் உங்கள் ஆடை களை' என்று பகன்று—குடத்தில் புனல் பரப்பி பொற்பாவையர் கள் வைகறை நின்றும் வீடு திரும்புங்காலை அவர்களின் பின் நின்று பின்னலைப் பிடித்திழுத்து—பேதையர்களை பித்தங் கொள் ளச் செய்து பின் அவர் தம கன்னங்களைச் சுவைத்து திருவிளை யாடல்கள் நடத்திய அந்த பிருந்தாவனத்து கண்ணனையும் ஒரு படி மிஞ்சிவிட்டான் இந்தக் கண்ணன்.

மல்லிகாவின் கன்னம் சிவக்கும் வரை மாறி மாறி முத்தங் கள் பொழிந்தான். அவள் தன் வாழ்நாளில் என்றுமே காணாத இன்பத்தைக் கண்டாள். தன் கணவன் மூலம் 'இழந்த வாழ்வை'

கண்ணன் மூலம் பெற திட உறுதி கொண்டாள். கூஜாவிலிருந்த பாலை ஊற்றி, பாலை அவனது வாயருகே கொண்டு சென்றாள். அவன் குடித்தான், பின் அவளுக்கும் ஊட்டினான். "கண்ணா, இனி நீதான் என் உயிர், நீயின்றி இன்பம் இனி வேறில்லை" என்றாள் போதையுடன். "நம் செயல் வெளியில் தெரிந்தால்......?" என்றான் ஏக்கமும் பயமும் கலந்த குரலில் கண்ணன். "இன்னல் நம்மைத் துரத்தினால் இந்த உலகில் எங்காவது ஓர் இடம் நமக்குக் கிடைக்காமலா போய்விடும்" என்றாள் மல்லிகா உறுதியுடன். "மல்லிகா!" என்று அவளை கைகளைப் பற்றினான் கண்ணன். அவள் அவனுடைய தலையை பாசத்துடன் வருடினாள். அவன் அவளுடைய தோள்களில் முகத்தைப் புதைத்தான். அவள் அவனை இறுக அணைத்தாள். அந்த அணைப்பிலே அவள் உலகத்தின் இன்பங்களையெல்லாம் ஒருங்கே கண்டாள்.

சன்னலின் வழியே தலை நீட்டிக் கொண்டிருந்த ரோஜா மலரை கண்டதும் அதனிடம் சென்றான் கண்ணன். மலரைப் பறித்த அவனுடைய கைகளை ரோஜாச் செடியின் முற்கள் கிழித்தன. அவன் 'ஆ' வென்று கைகளை இழுத்துக் கொண்டான். அவனுடைய விரல்களில் இரத்தம் வடிந்தது. அதை துடைத்துக் கொண்டு அவளுடைய கூந்தலில் சூடினான் இரத்தக்கறைபட்ட அந்த சிவப்பு ரோஜாவை.

"கண்ணா!" என்று அவனுடைய கரங்களை இறுக பற்றினாள் மல்லிகா. "மல்லிகா!" என்று அவளை அணைத்துக் கொண்டான் கண்ணன். அங்கே—இன்பம் பூத்துக் குலுங்கியது. ஆனால் அந்த அறையின் வெளியே எரிமலை குமுறியதை யாரும் கவனிக்கவே இல்லை. வெளியே—சுவற்றில் சாய்ந்து கொண்டு கண்களில் நீர் வடிய இதயம் துடிக்க நின்று கொண்டிருந்தான் இளங்கோ.

இளங்கோவனின் தலை சுழன்றது. அவன் நின்று கொண்டிருக்கும் பூமி காலைவிட்டு நழுவுவது போன்ற பிரமை ஏற்பட்டது. ஆயிரம் தேள்கள் ஏககாலத்தில் கொட்டுவதாக உணர்ந்தான். கொதிக்கும் கொப்பறையில் தலை குப்புற வீசி எறியப்படுவதாக கருதினான். அவனால் அங்கே நிற்கவே முடியவில்லை. வெறி கொண்டவனைப் போல் 'தட தட'வென ஓடினான் வீட்டிற்கு வெளியே. சப்தம் கேட்டுத் திடுக்கிட்ட மல்லிகா பயந்து போய்

வெளியே வந்து பார்த்தாள். தன் கணவன் வெறி பிடித்தவனைப் போல் ஓடுவதைக் கண்டதும் அவளை யாரோ சம்மட்டி கொண்டு தாக்குவதாக உணர்ந்தாள்.

பகலோன் அஸ்தமிக்கும் வேளையில் அலை வீசி ஆர்ப்பரிக்கும் கடலின் ஓரத்தில் நின்று கொண்டு பயித்தியம் பிடித்தவனைப் போல் ஏதேதோ முணகினான் இளங்கோ. "என் தவறு! என் தவறு! நான் அவள் வாழ்வை குழி தோண்டி புதைத்துவிட்டேன். வாழவேண்டியவளை வாழ முடியாதவளாக்கிவிட்டேன். இனி நான் ஏன் வாழ வேண்டும், இனி நான் ஏன் வாழ வேண்டும்" என்று பலவாறு பிதற்றினான். அவன் நெடுங்கடலை கண் இமைக்காது பார்த்துக் கொண்டிருந்தான். அங்கே இயற்கையின் வளமிக்க அழகுக் காட்சிகள் அவனுக்கு சிறிது அமைதியைத் தந்தன. மணல் பரப்பின் மேல் உட்கார்ந்து அப்படியே படுத்துவிட்டான். உள்ளத்தைக் கவ்விய துயரங்களை விரட்டியடிக்க முயன்றான். ஆனால் கடலின் பேரிரைச்சல் அவன் உள்ளக் கொதிப்பைப் பெருக்கியது.

பெறுமவற்றுள் யாமறிவ தில்லை யறிவறிந்த
மக்கட்பே றல்ல பிற —குறள்

# 12. காதல் தியாகம்

தங்கம் விக்கி விக்கி அழுதாள். அவளுடைய துயரம் தோய்ந்த உள்ளத்திலிருந்து கிளம்பிய ஒவ்வொரு விம்மலும் அந்த அறையின் சுவற்றில் மோதி எதிரொலித்தது. கண்களில் தீப்பொறி பறக்க நின்று கொண்டிருந்தான் மன்னர். மாதவி ஆத்திரத்துடன் அவனை எரித்துவிடுபவளைப் போல் பார்த்துக் கொண்டு நின்றாள். "தங்கம்! முடிவாக என்ன சொல்கிறாய்?" என்று உறுமினான் மன்னர். "முடியாது. நீ என்னை இவ்வளவு நாள் ஏமாற்றி வந்ததைப் போல் இனியும் ஏமாற்ற முடியாது.", "இதுதான் உன் இறுதி முடிவா?" என்றான் ஆத்திரத்துடன். "ஆம்! என் உயிருக்கும் மானத்திற்கும் பயந்து என் மகளின்

வாழ்வை ஒரு கிழவனின் கையில் ஒப்படைக்கமாட்டேன்.'' என்ருள் தங்கம். "தங்கம்! இன்னும் ஒரு நாள் அவகாசம் தருகிறேன். நாளை இன்னேரத்திற்குள் உன் பதில் எனக்கு சாதகமாக இல்லாவிட்டால் உன் வண்டவாளங்களை தண்டவாளத்தில் ஏற்றுவேன். மக்கள் உன் முகத்தில் காறி துப்பும்படி செய்வேன்'' என்று கூறிவிட்டு மன்னூர் நடையைக் கட்டினன்.

தங்கம் தன் இரு கைகளாலும் முகத்தை மூடிக்கொண்டு அழுதாள். மாதவி அந்த அன்புத்தாயை ஓடிப் போய் கட்டிக் கொண்டாள். தங்கம் அவளை அணைத்துக் கொண்டு நெடுநேரம் அழுதாள். "அம்மா, அந்தக் கயவன் உங்களை மிரட்டும் மர்மம் என்னவென்று எனக்குச் சொல்லுங்களம்மா'' என்று கேட்டாள். "மாதவி! கண்ணே, நீ ஏன் என் வயிற்றில் பிறந்தாய்?'' என்று விக்கி விக்கி அழுதாள் தங்கம். "அம்மா! சொல்லுங்களம்மா, சொல்லுங்கள்'' என்று மாதவி அவளை வற்புறுத்தினுள்.

"மாதவி சொல்கிறேன் கேள்! அந்த பயங்கர ரகசியத்தை யாரிடமாவது சொன்னல்தான் என் மனக்கவலை சற்றுத் தணியும்'' என்று ஆரம்பித்தாள் தங்கம். "உன் தந்தை தற்கொலை செய்து கொண்டார் என்று ஊரார் சொல்லக் கேட்டிருக்கிருய். அதையேதான் நீயும் நம்பிக் கொண்டிருக்கிருய். ஆனல் உண்மையில் உன் தந்தை தற்கொலை செய்து கொள்ளவில்லை. கொலை செய்யப்பட்டார். ஆம், கொலை செய்யப்பட்டார்; அதுவும் இந்த வஞ்சகியின் கரங்களால். உனக்கு எல்லாம் புதிராக இருக்கலாம். ஆனல் இது உண்மை. உன் தந்தை ஒரு போலீஸ் 'இன்ஸ்பெக்டர்' என்பதுதான் உனக்குத் தெரியுமே. பெரும்பாலும் எல்லா போலீஸ் ஆபீஸர்களிடத்திலும் இருக்கும் 'கைஊட்டி' (லஞ்சம்) வாங்கும் பழக்கம் உன் தந்தையிடமும் எப்படியோ குடி புகுந்து விட்டது. ஆரம்பத்தில் அதை அவ்வளவாகப் பொருட்படுத்தாத நான் அவர் வர வர மோசமான போக்கில் போவதைக் கண்டு அவரை கண்டிக்க ஆரம்பித்தேன். அதன் விளைவாக எங்களுக்குள் அடிக்கடி தகராறு ஏற்படுவது வழக்கமாகிவிட்டது. ஒரு நாள், அவர் ஒரு கொலைக் கேசை மறைத்துவிட அதிகப் பணம் வாங்கியது எப்படியோ மேலதிகாரிகளுக்கு எட்டிவிட்டது. அதை மறைக்க அவர் எவ்வளவோ முயன்றும் முடியவில்லை இறுதியில் அவரை நோக்கி தோல்வி பயங்கர உருவில் நெருங்கி வர ஆரம்பித்தது. அன்று இரவு நான் கோபம் கொண்டு அவரை

ஏசினேன். அதனால் அவர் ஆத்திரத்தின் எல்லேக்கே வந்துவிட்டார். என்னை அடிப்பதற்கு அவர் கையை ஓங்கினர். அப்போது அங்கே தோன்றிய மன்னர்சாமி அதைத் தடுக்கவே அவருக்குக் கோபம் அதிகமாகியது. இருவரும் அப்போது போட்ட வாய்ச் சண்டை முற்றி கைச்சண்டையில் வந்து முடிந்தது. அப்போது முரடனை மன்னர்சாமி அவரைத் தாக்கவே அவர் கோபம் கொண்டு கைத்துப்பாக்கியை எடுத்து அவனைச் சுடப் போனர். அதை நான் தடுக்கவே குறி தவறி......... அய்யோ மாதவி என்ன சொல்வேன். உன் தந்தையின் வயிற்றில் தோட்டா பாய்ந்துவிட்டது. அவர் துப்பாக்கி என் கையில் இருந்தது. அந்த நிலையில் அது எதிர்பாராத சம்பவமாக இருந்தாலும், என் மனதிற்கு நான் கொலைகாரியாகவே பட்டேன். அப்போது வஞ்சகன் மன்னர்சாமி என்னை ஏமாற்றி 'நான் தான் கொலை செய்தேன்' என்று ஒப்புதல் கடிதம் ஒன்று என் கைபட எழுதி வாங்கிக் கொண்டான். அவனுடைய சாமர்த்தியத்தால் 'கடமை தவறிய இன்ஸ்பெக்டர் தற்கொலை செய்து கொண்டார்' என்று எல்லோரும் ஒத்துக் கொண்டார்கள். மாதவி உனக்கு வியப்பாக இருக்கலாம், ஒரு அண்ணன் தன் தங்கையைக் காட்டிக் கொடுப்பான என்று. ஆனல் மன்னர்சாமி உண்மையில் என் சொந்த அண்ணனல்ல. என் தாயின் வளர்ப்புப் பிள்ளை அவன். அது அவனுக்கு நன்ருகத் தெரியும். ஆதலால்தான் அவன் எனக்கு தீங்கு செய்ய அஞ்சவில்லை. அந்த சம்பவத்திற்குப் பின் நான் எழுதிக் கொடுத்த அந்தக் கடிதத்தையே ஒரு கருவியாக வைத்துக்கொண்டு தேவைப்படும் போதெல்லாம் பணத்தைக் கரந்து கொண்டே இருக்கிருன். மாதவி இதுதான் அந்த ரகசியம்'' என்று கூறி முடித்தாள் தங்கம்.

''அம்மா!'' என்று அலறிவிட்டாள் மாதவி.

''மாதவி, பயப்படாதே உன்னை அந்த கிழவனுக்கு மணம் செய்விக்க நான் ஒரு போதும் சம்மதிக்க மாட்டேன்'' என்ருள் தங்கம்.

''அம்மா அந்தக் கயவன் உங்களை தூக்குமேடைக்கு அனுப்பினல்......'' என்று தன் கண்களில் கண்ணீர் மல்க கேட்டாள்.

''மாதவி! நான் இனி எப்படி செத்தாலும் ஒன்றுதான். நீ வாழ வேண்டியவள். நான் சிறையில் சந்தோஷத்துடன் சாவேன் நீ எழிலை மணந்து கொண்டால்,'' என்ருள் தங்கம்.

"அம்மா! உங்களை பலர் எள்ளி நகையாட விட்டு நான் மட்டும் சுகவாழ்வு வாழ்வதா முடியாதம்மா......... முடியாது."

"மாதவி! என்னம்மா சொல்கிறாய் நீ?"

"அம்மா நான் காதலை தியாகம் செய்துவிட்டேன்."

"மாதவி!"

"ஆம், அந்த கிழவரை நான் சந்தோஷத்துடன் மணந்து கொள்ளப் போகிறேனம்மா" என்றாள் மாதவி.

"மாதவி! வேண்டாம்...... வேண்டாம்" என்றாள் தங்கம்.

"அம்மா! என் வாழ்வை வளமாக்க நீங்கள் உங்கள் உயிரையும் மானத்தையும் ஒரு பொருட்டாக மதிக்காதபோது எனக்கு காதல் ஒரு பெரிதல்ல" என்று தன் அன்னையை அணைத்துக் கொண்டாள் மாதவி.

**இல்லதென் இல்லவள் மாண்பானால் உள்ளதென்**
**இல்லவள் மாணாக் கடை —குறள்**

# 13. விம்மலும் வேதனையும்

விண் மீன்களை கண்ணிமைக்காது பார்த்துக் கொண்டிருந்தான் இளங்கோ. அப்போது ஒரு எரி நட்சத்திரம் விண்ணிலிருந்து வந்து விழுந்தது மண்ணில், அவனுக்கு வெகு தூரத்தில். இளங்கோ சுய உணர்வு பெற்று சுற்று முற்றும் பார்த்தான். எங்கும் ஒரே நிலவொளி. அந்த ஒளியின் உதவிகொண்டு வீதியை வந்தடைந்தான் இளங்கோ. அவன் கால்கள் அவனுடைய வீடு நோக்கி விரைந்தன.

வீடு நெருங்க நெருங்க அவன் மனதில் வேதனை அதிகமாகிக் கொண்டே வந்தது. வீட்டை அடைந்து கதவைத் தட்டினான். கதவு தானாகத் திறந்து கொண்டது. இளங்கோ திகைப்புடன் உள்ளே நோக்கினான். அங்கே அவன் உள்ளத்தைப்போல் அந்த

அறையும் இருண்டுதான் கிடந்தது. எப்படியோ 'தட்டுத் தடவி' மின்சார விளக்கைப் பொருத்தினான். அந்த விளக்கொளியில் அறை அலங்கோலமாகக் கிடந்தது.

அவனுடைய கண்களுக்கு மேஜையின் மேல் ஒரு சிவப்பு நிற கடிதம் கிடப்பது தென்பட்டது. ஓடிப்போய் ஆவலுடன் கடிதத்தைக் கையில் எடுத்தான். அவனுடைய கரங்கள் லேசாக நடுங்கின. கடிதத்தைப் படித்தான், மல்லிகாதான் எழுதி இருந்தாள். 'அன்புள்ள அத்தான்' என்று ஆரம்பித்திருந்தாள். இளங்கோ தொடர்ந்து படித்தான்:

அன்புள்ள அத்தான்,

இப்படி அழைக்க எனக்கு உரிமை இருக்கிறதோ என்னவோ. ஆனால் முறை இருக்கிறது அல்லவா? அத்தான், நான் போய் வருகிறேன், எங்கே என்று எனக்கே தெரியாது. இது உங்களுக்கு அதிர்ச்சியைத் தரலாம் ஆனால் ஆழ்ந்து சிந்தித்துப் பார்த்தீர்களானால் அதிசயமாகத் தோன்றாது உங்களுக்கு. என் இடத்தில் நீங்கள் இருந்தால் உங்களுக்கு விளங்கும்......... அத்தான் உங்களிடம் எல்லாம் இருக்கிறது, நான் எதிர்பார்க்கும் ஒன்றைத் தவிர. அதுதான் ஆண்மை. பெண் 'மலடி'யாக இருந்தால் ஆண் மறுமணம் செய்து கொள்ள உரிமை உண்டு. ஆனால் பெண்களுக்கு அந்த உரிமை.........!? அத்தான் நான் இங்கு 'பொதுமை' பற்றி பேச வரவில்லை புதுமையான இந்த மன்பதையின் சட்டத் திட்டங்களை நினைத்த வேதனையில் சில சொல்கிறேன். ஆண்கள் அடாது செய்யலாம் ஆனால் பெண்கள் அஞ்சி, நாணி, அடங்கித்தான் வாழ வேண்டுமாம். கண்ணுக்குப் பிடிக்காவிட்டால்கூட கணவன் வேறொரு மாதை தேடி ஓடலாம்! ஆனால் பெண்? அவள், 'கல்லானாலும் கணவன் புல்லானாலும் புருஷன்' என்று அறிவுக்குப் பொருத்தமற்ற வறட்டு வேதாந்தம ஒன்றையே சட்டமாகக் கருதி பணிந்து போக வேண்டும். இது தானே இன்றைய சமூக சழுக்கர்கள் வடித்த சட்டம். அத்தான்! உண்மையை ஒத்துக்கொள்கிறேன். உளுத்துப்போன சமூக சட்டதிட்டங்களுக்குப் பயந்துதான் நான் இந்த ஊரைவிட்டே ஓடுகிறேன். நான் விரும்பினால் 'விவாக ரத்து' கோரலாம்.

அதற்கு 'அரசாங்க' சட்டம் இடங்கொடுக்கும். ஆனால் 'சமூக' சட்டம்......?! அத்தான்! போய் வருகிறேன் கண்ணன் துணையுடன்.

வாழவிரும்பும் தங்கள்,

**மல்லிகா**

இளங்கோவின் கரத்திலிருந்த கடிதம் நழுவி தரையில் விழுந்தது. இரண்டு அருவிகள் அவன் கண்களிலிருந்து கன்னத்தின் வழியே ஓடி தரையில் விழுந்தன. மெல்ல நடந்து சன்னலருகேபோய் நின்று வான வெளியை ஊடுருவிப் பார்த்தான். அங்கே—விண் மீன்களின் மத்தியிலே வளைந்த வடிவ வளர்மதி தன் ஒளியை வையகத்தை நோக்கி சொரிந்து கொண்டிருந்தது. குளுமையான மதியின் ஒளிக்கதிர்கள் கனலாக பாய்ந்தன அவன் முகத்தில். வெறுப்புடன் முகத்தை அறையின் உள்ளே செலுத்தினன். அங்கே அவனால் வரையப்பட்ட மல்லிகாவின் படம் அவனைப் பார்த்து புன்முறுவல் பூத்தது.

'மல்லிகா, மல்லிகா.........! நீ என்னை சரியாகப் புரிந்து கொள்ளவில்லை......... என்னை நீ சரியாகப் புரிந்து கொள்ளவில்லை. வெறும் மேற்போக்காக நீ என்னை எடைபோட்டுவிட்டாய்...... மல்லிகா நீ ஏமாந்து விட்டாய், நீ ஏமாந்து விட்டாய், மல்லிகா ஏமாந்து விட்டாய்......!'' என்று பைத்தியக்காரனைப் போல் பிதற்றினன், அந்த அறையில் விம்மலும் வேதனையின் எதிரொலியும மாறி மாறி கேட்டது.

உடுக்கை யிழந்தவன் கைபோல வாங்கே
இடுக்கண் களைவதாம் நட்பு —குறள்

# 14. மாதவியின் மடல்

தலையில் கட்டுடன் படுக்கையில் கிடந்த எழில் 'டக் டக்' என்று டாக்டரின் 'பூட்ஸ்' சப்தம் கேட்டு மெல்ல தலையை திருப்பி டாக்டரை நோக்கினன். "இப்போது எப்படி சார் இருக்கிறது" என்று அன்புடன் கேட்டவாறு அவனருகே வந்து நின்ரார் டாக்டர். "டாக்டர்! எனக்கு குணமாகிவிட்டது. நான்

இன்றே வீட்டிற்குப் போகலாமென்று நினைக்கிறேன்" என்றான் டாக்டரை நன்றியறிதலுடன் பார்த்தவாறு. "இல்லை இன்னும் சில நாட்களுக்கு நீங்கள் எங்குமே போகக் கூடாது" என்று கூறிய டாக்டரின் கரங்களைப் பற்றிக்கொண்டு "டாக்டர்! உங்களுக்கு நான் என்ன கைமாறு செய்ய முடியும்" என்றான். "மிஸ்டர் எழிலன் நீங்கள் நன்றி செலுத்தவேண்டியது எனக்கல்ல, மிஸ் மாதவிக்கு நீங்கள் நன்றி செலுத்த கடமைப்பட்டிருக்கிறீர்கள்" என்றார் டாக்டர் அமைதியுடன். "என்ன மாதவியா? டாக்டர் நீங்கள் என்ன சொல்கிறீர்கள்?" என்றான் ஒன்றும் விளங்காமல் எழில். "உங்களுக்கு தன்னுடைய இரத்தத்தை கொடுத்து உதவியவள் மாதவிதான்," என்றார் டாக்டர் "ஆ! மாதவி எனக்கு 'இரத்ததானம்' செய்தாளா?" என்றான் ஆச்சரியத்துடன். "ஆம்!" என்று கூறிய டாக்டர் தன்பையிலிருந்து ஒரு கடிதத்தை அவனிடம் நீட்டியவாறு "இதை உங்களிடம் கொடுக்கச் சொன்னாள் மாதவி" என்று கூறிவிட்டு "நான் பிறகு வருகிறேன்" என்று போய்விட்டார்.

துடிக்கும் இதயத்தை அழுத்திப் பிடித்துக்கொண்டு கடிதத்தைப் பிறித்தான் எழில்.

அத்தான்,

நான் வாழமுடியாதவளாகிவிட்டேன். என் காதலை தியாகம் செய்யத் துணிந்துவிட்டேன். நீங்களும் என்னை மறக்க முயற்சி செய்யுங்கள். இனிமேல் இந்த அபாக்கியவதியை என்றுமே சந்திக்க முயற்சி செய்யாதீர்கள். அத்தான் இந்தக் கடிதம் உங்கள் கைக்கு கிடைக்கும் இன்னேரம் நான் வேருருவருக்கு அடிமையாகிவிடுவேன். அன்பே வடிவான உங்கள் திருவடிகளுக்கு தொண்டு செய்யும் பேறு பெருத இந்தப் பேதையை மன்னித்து, மறந்துவிடுங்கள்.

தங்கள்,
**மாதவி.**

கடிதத்தைப் படித்த எழில் அப்படியே தன்னை மறந்து உட்கார்ந்துவிட்டான். தன் தலையில் வானமேஇடிந்துவிழுவதுபோன்ற உணர்ச்சி ஏற்பட்டது அவனுக்கு. "எழில்! எழில்!" என்று யாரோ அவனை அழைக்கும் குரல்கேட்டு சுய உணர்வு பெற்றான். அவனருகே நின்றுகொண்டிருந்தான் இளங்கோவன். அவனைக் கண்டஎழிலின் கண்கள் புனல் சொரியும் அருவியாக மாறின.

“இளங்கோ, இளங்கோ” என்று அவனைப் பிடித்துக்கொண்டு விம்மினான். “எழில்! ஏன் அழுகிறாய்?” என்று வினவினான் இளங்கோ. “இளங்கோ, மாதவி என்னை ஏமாற்றிவிட்டாள்” என்றான் எழில் ஆத்திரத்துடன். “எழில் நீ மாதவியை காதலித்தாயா?” என்றான் வியப்புடன் இளங்கோ. எழில் தன் கையிலிருந்த கடிதத்தை இளங்கோவிடம் நீட்டினான். அவன் அதைப் படித்துவிட்டு “எழில் மாதவி மிகவும் நல்லவள்” என்றான். “நல்லவளா? இளங்கோ அவள் ஒரு நாசகாரி. சமுதாயத் தொண்டே என் பணி என்றிருந்த என் உள்ளத்தில் சபலத்தை ஏற்படுத்திய சதிகாரி. கண்ணைக் காட்டி, கொள்கைப் பாதையில் நடந்து சென்ற என்னை காதல்பாதைக்கிழுத்து அவமானப்படுத்திய சண்டாளி. மாதவி என்ற பெயருக்கே களங்கம் தேடித்தந்த பாஞ்சாலி.........” என்று ஏதேதோ கூறிப் புலம்பிய எழிலனை தட்டிக்கொடுத்தவாறு, எழில்! அவசரப்படாதே. எழுத்தாளனாகிய நீ கூடவா ஆத்திரத்தில் அறிவிழந்துவிடுவது? எழில், நன்றாக சிந்தித்துப்பார். மரணவாசலில் நின்றுகொண்டிருந்த உனக்கு தன்னுடைய இரத்தத்தை தந்து உதவிய உத்தமியப்பா அவள். உனக்குத் துரோகம் செய்பவளாக இருந்தால் உன் உயிரை மீட்க அவள் ஏன் தன்னுடைய இரத்தத்தை உன் உடலில் ஏற்றிமாற வேண்டும். எழில்! கடிதத்தை நன்றாகப் படித்துப்பார், அப்போது தான் அவளுடைய காதல் உள்ளத்தின் வேதனைக்குரல் உனக்கு கேட்கும்,” என்றான் இளங்கோ.

“ஆம்! அய்யோ மாதவி.........மாதவி, களங்கமற்ற உன்னை ஏதேதோ கூறிவிட்டேன், என்னை மன்னித்து விடு. என்னை மன்னித்து விடு” என்று கதறினான் எழில். “எழில் கவலைப்படாதே நடந்தது நடந்துவிட்டது. இனி அவளை மறந்துவிடு. பழையபடி உன் ‘நாட்டு சேவை’யை ஆரம்பித்துவிடு. ‘சமூகத்திற்குப் பயந்து பதுங்கும் பூனையல்ல அவன். பாய்ந்து வரும் புலி’ என்று உன்னைப் பற்றி பேசிக்கொள்வார்களே இந்த நாட்டு மக்கள். அவர்களுக்கு உன் தொண்டை செய்” என்றான் இளங்கோ அவனைத் தேற்றியவாறு.

“இளங்கோ, எப்படி மறப்பேன் அவளை. அந்த வட்டக்கரிய விழியை சுழற்றி, தென்றலென அவள் சிந்தும் அந்தப் புன்னகை மறக்கக் கூடியதா?” என்று இளங்கோவை நோக்கினான். “எழில் நீ எப்படியும் அவளை மறந்துதான் ஆகவேண்டும். மாற்றானின்

மனைவியை மனதால் நினைப்பதே உன்போன்ற சான்ருேர்களுக்கு இழுக்கு'' என்ருன் இளங்கோ.

''மாற்ருனின் மனைவியா? எனக்கு ஒன்றுமே விளங்க வில்லையே''

''எழில்! மாதவிக்கும் நம் கண்ணபிரானுக்கும் மணம் முடிந்து விட்டது'' என்ருன் இளங்கோ தழுதழுத்த குரலில்.

''அய்யோ, மாதவி!'' என்று எழில் நெடுநேரம் அழுதான். அதன்பின் இளங்கோ அவனை தேற்றி ''எழில், ஏமாற்றம் எல்லோருக்கும் சகஜம், அதுவும் நம்போன்றவர்களுக்கு அது சர்வ சாதாரணம்'' என்ருன்.

''இளங்கோ, உன்னைப்போல் நானும் வாழ ஆசைப்பட்டேன்......'' என்று எழில் கூறி முடிக்கு முன் ''எழில், என்னைப் போல் வாழ ஆசைப்பட்டாயா?'' என்று கேட்டான் துயரம் கலந்த குரலில் இளங்கோ. ''ஆம்'' என்ருன் எழில். இளங்கோ வின் இதழ் கோடியில் மின்னி மறைந்த ஓர் சோகப் புன்னகையை பார்த்து எழில் திடுக்கிட்டான். ''இளங்கோ, உன்னைப்போல் வாழ ஆசைப்பட்டது தவரு?'' என்ருன் எழில். ''வேண்டாம் எழில் என்னைப்போல் வாழ ஆசைப்படாதே'' என்ருன் இளங்கோ ''ஏன்?'' என்று கேட்டான் எழில். ''எழில் உன் வேதனையை அதிகமாக்க விரும்பவில்லை. இந்தா இதை வைத்துக்கொள். நான் இன்றே வெளியூருக்குப் போகிறேன். திரும்பி வந்தால் உன்னை சந்திக்கிறேன்'' என்று அவன் கையில் பணத்தை திணித்தான். இளங்கோ ''நீ கூட என்னை விட்டுப் போகிருயா?'' என்ருன் ஏக்கத்துடன் எழில். ''எழில் போகவேண்டிய நிலை. உன்னை மீண்டும் சந்திக்கிறேன், அப்போது நீ பழைய எழிலாக இருக்கவேண்டும். அவளை மறந்துவிடு! மறக்கமுடியாத வேளைகளில் ஆடும் கொடியையும் அதை தாலாட்டும் தென்றலையும்பார். பால் நிலவையும் நீல வானையும் நோக்கு. அலைவீசும் கடலையும் அதில் மிதக்கும் கலங்களையும், இன்னும் இயற்கையின் இன்பக் கோலங்கள் அனைத்தையும் பார். உன் துயரமெல்லாம் பறந்துபோகும்'' என்று கூறி விட்டு இளங்கோ போய்விட்டான்.

அவன் போனபின் ''ஆடும் கொடியைப் பார்த்தால் அவளுடைய துவளும் இடையும்—தென்றலை நினைத்தால் அவள் புன்ன

கையும்—பால் நிலவை எண்ணினால் பாவையவள் முகமும் நீல வானை நினைத்தால் நீண்ட அவள் கூந்தலும்—அலைவீசும் கடலைக் கண்டால் ஒளி வீசும் அவள் கண்களும் என் உள்ளத்திலே மாறி மாறி வந்து வாட்டுமே எப்படி மறப்பேன் அவளை,'' என்று கலங்கினான் எழில்.

> தற்காத்துத் தற்கொண்டாற் பேணித் தகைசான்ற
> சொற்காத்துச் சோர்விலாள் பெண் —குறள்.

# 15. அலைகடல்

'ஓட்டல் பேரடைசில்' ஏழாவது மாடியில் ''33-''ம் நம்பர் அறையில் மல்லிகா நிலைக்கண்ணாடியின் முன் நின்றுகொண்டு தன்னை அலங்கரித்துக்கொண்டிருந்தாள். கண்ணன் அவள் அழகை ரசித்தவாறு கட்டிலில் சாய்ந்துகொண்டிருந்தான், ஆனால் அவன் முகத்தில் இனம் தெரியாத கோபம் பரிமளித்துக்கொண்டிருந்தது. ஓட்டல் 'சர்வர்' சாப்பாட்டைக் கொண்டுவந்து வைத்துவிட்டு போய் அரை மணி நேரமாகிவிட்டது. சாப்பாடு ஆறி அவலாகிக்கொண்டிருந்தது. ''கண்ணா! வா, சாப்பிடலாம்'' என்று அவனைக் கூப்பிட்டவாறு அவனருகே வந்தாள் மல்லிகா. அவன் வெறுப்புடன் திரும்பிக்கொண்டான். ''கண்ணா! என்மேல் கோபமா?'' என்றாள் செல்லமாக. ''உன் போக்கு வரவர எனக்குப் பிடிக்கவேயில்லை'' என்றான் கண்ணன் கடுகடுப்புடன்.

''ஓஹோ! நேற்று நான் அடுத்த அறையில் தங்கியிருக்கும் மிஸ்டர் மோகனுடன் காற்று வாங்கப்போனது உனக்குப் பிடிக்கவில்லையா? கண்ணா இனி அப்படி செய்யமாட்டேன். வா, காப்பி ஆறிவிட்டது'' என்றாள் சமாதானத்துடன். ''விடு என்னை 'மிஸ்டர் மோகன்' மரியாதைவேறா அந்த மடையனுக்கு. மல்லிகா நீ அந்தப்பயலிடம் பல்லை இளித்துக்கொண்டு பேசுவதைப் பார்க்க எனக்கு உடல் எரிகிறது'' என்றான் கோபத்துடன். ''கண்ணா! நாம் யாரையும் பகைத்துக்கொள்ளக்கூடாது. மோகன் மிகவும்

நல்லவர்,'' என்றாள் மல்லிகா. "நல்லவன்! புரிகிறது மல்லிகா, நன்றாகப் புரிகிறது. அன்று உன் கணவனை ஏமாற்றி என்னை உன் காதலனுக்கிக் கொண்டதுபோல் இன்று என்னையும் ஏமாற்றி அவனை உன்........'' என்று ஏதோ சொல்லப்போன கண்ணனின் வாயை மூடிய மல்லிகா அவனை செல்லமாக கன்னத்தில் தட்டிய வாறு "கண்ணு! அப்படிச் சொல்லாதே உன்னைநான் ஏமாற்ற மாட்டேன். இனி அந்த மோகனுடன் பேசுவதை நிறுத்திவிடு கிறேன், போதுமா?'' என்றாள் சிரித்துக்கொண்டே. கண்ணன் சிரித்துக்கொண்டே எழுந்தான். இருவரும் சாப்பிடச் சென்றனர்.

அன்று மாலை கண்ணனும் மல்லிகாவும் கடற்கரைக்குச் சென்றார்கள். அங்கே தென்றல் வந்தது—இசை வந்தது—இன்பம் வந்தது, அவற்றுடன் இளம் காதலர்கள் பலரும் வந்தனர். அந்தக் காதலர்களுடன் காசைப்பறிக்கும் நோக்கங்கொண்ட 'இரவுப் பறவை'களும்—வரம்பைத் தாண்டிக்கொண்டிருக்கும் இளமையின் மென்னியைப் பிடித்து இழுத்துக்கொண்டு வருவதாக கற்பனை செய்துகொண்டு 'சுருங்கிப்போன' கன்னங்களுக்கு 'கோரனேசன் டால்கம் பவுடரும்'—பொத்தல் விழுந்த உதட்டிற்கு 'லிப்ஸ்டிக்'கும் நரைத்துப்போன கூந்தலுக்கு நவநாகரிக நரைபோக்கும் மையும்—'சோஷல்' என்ற போர்வையிலே நடத்திய 'எஞ்சாய்மெண்டின்' விளைவால் சொரிபிடித்த உடலுக்கு விலைமிக்க பட்டாடை உடுத்தி 'பாரிஸ்' தூக்குக்கால் சப்பாத்துமாட்டி 'டம்பப்பையை' சுழற்றியபடி 'வாலிப' மைனர்களின்மேல் கண்வலை வீசும் பெரிய இடத்து 'கிழட்டுக் குமரிகளும்,' வண்ணான் கடையிலே வாங்கிய 'இரவல்' ஆடையை உடுத்தி மதிப்பு வாய்ந்த சிகரட் டப்பா வினுள் 'மட்டரக விலைமலிந்த' சிகரட்டை அடைத்துக்கொண்டு ஓடாத கடிகாரத்தை அழகாக கட்டிக்கொண்டு பார்ப்பவர்களின் மேலெல்லாம் பார்வையை அனாவசியமாக வீசியபடி 'பணமில்லா பாக்கெட்டில் கையை திணித்துக்கொண்டு படாடோப நடை போடும் 'வெத்து வேட்டு'களும் நிறைந்த கடற்கரையில் கண்ண னுக்கும் மல்லிகாவிற்கும் ஒரு இடம் கிடைக்காமல் போய்விட வில்லை.

இருவரும் ஒரு ஒதுக்குப்புறமாக அமர்ந்தார்கள். மல்லிகா செக்கர் வானத்தின் சிவப்பு நிறத்தோற்றத்தை கண் கொட்டாது பார்த்துக்கொண்டிருந்தாள். கண்ணன் பயங்கர ஓசையுடன் கரையில் மோதும் கடல் அலைகளை ஆர்வத்துடன் பார்த்துக்

கொண்டிருந்தான். காற்றிலே மிதந்து வந்தது ஒரு சினிமா படத்தின் இசை. மல்லிகா நிமிர்ந்து பார்த்தாள். அங்கே அவளுக்கு சிறிது தொலைவில் ஒரு குருட்டுப் பிச்சைக்காரன் பாடியபடி மெல்ல வந்துகொண்டிருந்தான். அந்தப் பிச்சைக்காரனுக்கு வழி காட்டிக்கொண்டு வந்தாள் அவன் மனைவி. அந்தப் பிச்சைச்காரி வறுமையில் வாடிஞலும் 'தாஜ்மகாலி'ன் பிரதிபிம்பம்போல் இருந்தாள். மல்லிகா அவளையே பார்த்துக்கொண்டிருந்தாள். அப்போது அங்கே இருந்த மைனர் ஒருவன் அந்தப் பிச்சைக்காரியை நோக்கி காசை நீட்டிஞன். அவள் கையை ஏந்திஞள். அவன் காசு கொடுப்பதுபோல் அவளுடைய கையைப்பிடித்து இழுத்தான். அவள் கையை உதறிக்கொண்டு அவனை எரித்துவிடுவதுபோல் பார்த்தாள். அவன் பல்லை இளித்துக்கொண்டு அவளை நெருங்கிஞன். அவ்வளவுதான் 'பளார்' என்று அந்தப் பிச்சைக்காரி ஓங்கி அறைந்தாள். அவன் அறையை வாங்கிக்கொண்டு மெல்ல நழுவிவிட்டான். அந்தப் பிச்சைக்காரி கண்களை துடைத்துக்கொண்டு அந்தக் குருடனுடன் அவன் கையை அணைத்தவாறு நடந்தாள்.

மல்லிகாவின் மனதிலே யாரோ ஒரு கூர்மையான வேலை சொருகியதுபோல் துடித்தாள். அவள் மீண்டும் அந்தப் பிச்சைக்காரியை நோக்கிஞள். அந்தப் பிச்சைக்காரி அவளுடைய குருட்டுக் கணவனை அன்புடன் அணைத்தபடி நடந்துகொண்டிருந்தாள். "பிச்சைக்காரி" மனித வாழ்வில் கேவலமாக கருதப்படும் ஓர் ஜீவன். ஆஞல் அந்த ஜீவனிடத்தில்தான்......எத்தகைய உயரிய பண்பாடு பூத்துக் குலுங்குகிறது. அவன் குருடன்—அவள் அழகி. ஆஞல் அவள் அவனை காதலிக்கிருள்.........! அதேசமயம் மல்லிகாவோ கொண்டவனை விட்டு கண்டவன் ஒருவனுடன் ஓடிவந்து விட்டாள். இதை நினைக்கும்போது மல்லிகாவின் தலையில் யாரோ சம்மட்டிகொண்டு தாக்குவதுபோல் உணர்ந்தாள். அவள் கண்கள் கண்ணீரை உகுத்தன.

"என்ன மல்லிகா, ஏன் அழுகிருய்?"

"கண்ணு! வாபோகலாம் என் மனம் இன்று சரியாக இல்லை"

"சரி புறப்படுவோம்."

இருவரும் புறப்படும்போது 'கலீர்' என்று சிரிப்பொலி கேட்டுத் திரும்பிஞள் மல்லிகா—அங்கே, நவஞகரிக பேய் ஒன்று கூச்ச

மின்றி தன் பக்கத்திலிருப்பவனின்மேல் சாய்ந்துகொண்டிருந்தாள். அவன் அவளுடைய இடுப்பைச் சுற்றி கையை மேயவிட்டிருந்தான். மல்லிகாவிற்கே அதைப்பார்க்க அருவருப்பாக இருந்தது. ஆனால் கண்ணன் அதை நன்றாக ரசித்தான்.

"சரி, ராஜா! நான் போகவேண்டும். என் கணவர் வந்திருப்பார் இன்னேரம்!"

"லில்லி! அதற்குள்ளாகவா போகிறாய்?"

"ராஜா! மீண்டும் நாளை சந்திப்போம்."

என்று கூறிய அவள் கொஞ்சமும் நாணமின்றி அந்த ஆடவனின் முகத்தில்.........(!) மல்லிகாவால் அதற்குமேல் அங்கே நிற்க முடியவில்லை. உடனே அவ்விடத்தை விட்டு வேகமாக நடந்தாள். அவளுடைய மனதில் "நான் ஒருவள் மட்டுமல்ல, என்னைப் போல் இன்னும் அனேகர் இருக்கத்தான் செய்கிறார்கள்" என்று சிறிது ஆறுதலும் "நானாவது கணவனை விட்டு ஓடிவந்துவிட்டேன். இவளோ தன் கணவனை ஏமாற்றி தன்னுடைய 'பத்தினி' வேஷத்திற்கு திரைபோடுகிறாள்" என்று அமைதியும் அடைந்தாள். ஆனால் அது நெடுநேரம் நீடிக்கவில்லை. யாரோ ஒரு பெரிய கூட்டமே தன் பின்னால் நின்றுகொண்டு "வஞ்சகி, விபச்சாரி, ஓடுகாலி" என்று வசைபாடுவதாக உணர்ந்தாள். அவள் மனம மாளாத துயரவெள்ளத்தில் ஆழ்ந்தது. அவளுடைய உள்ளம குமுறும் 'அலைகடலா'க மாறியது.

அன்பிற்கு முண்டோ அடைக்குந்தாழ் ஆர்வலர்
புன்கணீர் பூசல் தரும் —குறள்.

# 16. பிணம் தின்னிக் கழுகுகள்

மாதவி திறந்த சன்னலின் அருகில் நின்றுகொண்டு பரந்த வானவெளியை நோக்கி தன் பார்வையை வீசினாள். அங்கே—மேற்றிசையில் செங்கதிரோன் அஸ்தமித்துக்கொண்டிருந்தான். அது

மயக்கும் மாலை நேரம்—தென்றல் தவழ்ந்து வந்து மோதும் இன்ப வேளை. மலரின் நறுமணத்தை அணைத்தவாறு மேவிய தென்றல் மாதவியின் மனதிலே அமைதியை தருவதற்குப் பதிலாக துன்பத்தையே பெரிதும் பொழிந்தது. அவள் மனதிலே பல நாட்களுக்கு முன் அவள் கற்பை பறிக்க முயன்ற கயவர்களின் கையில் சிக்காமல் ஓடி எழிலின் வீட்டினுள் நுழைந்ததும், அங்கே அவன் பண்பட்ட முறையில் அடக்கத்துடன் நடந்துகொண்ட விதமும் தோன்றி தோன்றி மறைந்தன. எழிலை நினைத்ததும் அவள் கண்கள் குளமாக மாறின. தன் கழுத்தில் தொங்கிய தாலியை எடுத்துப் பார்த்தாள். வறண்டதோர் பெருமூச்சு மங்கையவள் உள்ளத்திலிருந்து வெளிப்பட்டது. அப்போது—

"மாதவி........." என்ற குரல் கேட்டு, கண்களை துடைத்தபடி திரும்பினாள். அங்கே—அவள் கண்களை அவளாலேயே நம்ப முடியவில்லை. ஆம், அங்கே, எழிலன் நின்றுகொண்டிருந்தான். "அத்தான்" என்று அவனிடம் ஓடினாள். "மாதவி, உள்ளே வர அனுமதியுண்டா?" என்றான் ஏக்கத்துடன். மாதவியின் உடலை யாரோ வாள்கொண்டு வெட்டுவதுபோல் உணர்ந்தாள். "அத்தான்! உள்ளே வாருங்கள். இங்கே யாருமில்லை" என்றாள். "மாதவி, அப்படியானால் நான் போய்வருகிறேன். யாருமில்லா வேளையில் நான் உள்ளே வந்தால் உனக்குத்தான் களங்கம் வரும்" என்று திரும்பினான். "அத்தான்! அத்தான் போகாதீர்கள். நம் உள்ளம் தூய்மையாக இருக்கையில் களங்கம் எப்படி அத்தான் வரும்" என்று அவனை உள்ளே அழைத்துச் சென்றாள்.

"அத்தான் நான் ஏதாவது உங்களுக்குத் துரோகம் செய்திருந்தால், என்னை........" அதற்குமேல் பேச முடியாமல் விக்கி விக்கி அழுதாள். "மாதவி, ஏன் அழுகிறாய்? நீ அழுவதாக இருந்தால் நான் போய்விடுகிறேன்," என்று எழுந்தான் எழில். "அத்தான் நான்செய்த தவறு........." என்று மீண்டும் அழுதாள் மாதவி. "மாதவி நீ ஒரு தவறும் செய்யவில்லை. அப்படியே செய்திருந்தாலும் நான் உன்னை மன்னிக்க என்றென்றும் தயாராக இருப்பேன். மாதவி, நீ எங்கிருந்தாலும்.........யாருடைய சொத்தாக இருந்தாலும்—சுகமாக வாழ்ந்தால் அதுவே எனக்குப் போதும்" என்று கூறிய எழிலின் பாதங்களை கண்ணீரால் கழுவினாள் மாதவி. "மாதவி! அழாதே நடந்தவற்றை மறந்துவிடு" என்று அவளைத் தேற்றினான் எழில்.

"அத்தான்! உங்கள் திருவடிகளை என் கண்ணீரால் கழுவு வதைவிட நான் உங்களுக்கு வேறு என்ன கைமாறு செய்ய முடியும்."

"மாதவி! உன் உள்ளத்தில் எனக்கு என்றென்றைக்கும் இட மிருக்கும் அல்லவா? அதுவே போதும்."

"அத்தான்!"

"மாதவி! தவருக எண்ணிவிடாதே.........ஏதோ உணர்ச்சி வசப்பட்டு கூறிவிட்டேன்."

"அத்தான்! நான் அப்படி நினைக்கவேமாட்டேன். நீங்கள் தெய்வம்."

"மாதவி..............."

"என்ன அத்தான்..........."

"நான் இந்த ஊரைவிட்டே போக முடிவு செய்துவிட் டேன்."

"அத்தான்! நீங்கள் எங்குமே போகவேண்டாம்.........இந்த ஊரிலேயே இருங்கள். இருவரும் களங்கமற்ற தூய வாழ்க்கை நடத்துவோம்."

"மாதவி.........நான் இங்கு இருந்தால் உன் அமைதி அழிந்து விடும். நான் இங்கு இருக்கக் கூடாது—இருக்கவும் முடியாது."

"ஏன்?"

"மாதவி! என் வீடு தீக்கிரையாகிவிட்டது. இல்லை......தீக் கிரையாக்கப்பட்டது சில நல்ல மனிதர்களால்."

"அய்யோ! அத்தான் எனக்குத் தெரியும் அது யார் வேலை என்று."

"வேண்டாம் மாதவி, வேண்டாம் அது யாராகவேண்டுமானு லும் இருந்துவிட்டுப் போகட்டும்."

"அத்தான்! நீங்கள் வாழமுடியும் இந்த ஊரில்."

"நான் வாழ விரும்பவில்லை."

"ஆ!"

"மாதவி! என் இன்ப துன்பங்களில் பங்குபெற நீ ஒருவள் தான் இருந்தாய். அதுவும் இப்போது நீ வேருெருவரின் உடமை யாகிவிட்டாய். இனி எனக்கு இந்த ஊரில்.........ஏன் இந்த உல கிலேயே எனக்கு ஏதுமே இல்லை."

"அத்தான்........."

"மாதவி.........இதோ நீ சிந்துகின்ருயே இந்தக் கண்ணீர் அது எனக்காக, என்பதை நினைக்க நான் எவ்வளவு மகிழ்ச்சியடைகிறேன் தெரியுமா? எனக்காக நீ சிந்தும் இந்தக் கண்ணீரே எனக்குப் போதுமானது நான் வருகிறேன்."

"அத்தான்! எனக்கு உங்களைத் தவிர இந்த உலகில் வேறு யார்துணை. என்னை ஈன்ற அன்புத்தாயும் திருமணத்தன்றே உள்ளம் வெடித்து இறந்துவிட்டாள்........."

"மாதவி.........மாதவி........."

"அத்தான் எனக்கும் அந்தக் கதியே வரவேண்டும் என்று நீங்கள் விரும்பினுல் உடனே போய்விடுங்கள்........."

"மாதவி! மாதவி.........நான் போகமாட்டேன். என்றும் இந்த ஊரிலேயே, உன்னுடனேயே இருப்பேன்."

"அத்தான்!"

"மாதவி!"

மாதவி உள்ளே ஓடினுள். உள்ளே ஓடிய மாதவி கையில் பாலுடன் வந்து அதை எழிலிடம் நீட்டினுள். அதை வாங்கிய எழில் மெல்ல சிரித்தான். துயரம் தோய்ந்த சிரிப்பு. மாதவி அவனைப் பரிதாபமாகப் பார்த்தாள். அவன் பாலைக் குடித்தான். மாதவி தன் கைகளில் கிடந்த பொன் வளையல்களை கழற்றி அவனிடம் நீட்டியவாறு "அத்தான்! இதை உங்கள் உபயோகத்திற்கு வைத்துக்கொள்ளுங்கள்" என்ருள். "மாதவி வேண்டாம் அவைகள் உன் கரங்களிலேயே கிடக்கட்டும். என் எழுதுகோலின் கூர்மை மழுங்கி விடவில்லை—என் உள்ளத்திலே கற்பனைவெள்ளம் வற்றிவிடவில்லை—என் கைகள் எழுதும் சக்தியை இன்னும் இழந்துவிடவில்லை. நான் இனியும் வாழமுடியும்" என்று அதை வாங்க மறுத்தான்.

"அத்தான் என் உதவியை ஏற்றுக்கொள்ள மாட்டீர்களா?"

"மாதவி, எனக்கு உதவி தேவைப்படும்போது உன்னிடம் வருகிறேன்."

"கட்டாயம் வாருங்கள் அத்தான்."

"மாதவி.........போய்வருகிறேன்" என்று எழில் எழுந்தான். அப்போது பயங்கரமாக சிரித்தபடி தோன்றினுன் மன்னுர்.

அவனுக்கு அருகில் கோபத்துடன்நின்றுகொண்டிருந்தார் மாதவி யின் கணவர் கண்ணபிரான். "டேய் நில் அங்கே!" என்று உறுமி ருன் மன்ஞர்சாமி. எழில் அவனை அலட்சியமாகப் பார்த்தபடி நின்றுகொண்டிருந்தான். மன்னர் அவனை ஓங்கி அறைந்தான். அறைவாங்கிய எழில் கண்ணபிரானின் அருகில் வந்து விழுந்தான். மாதவி கைகளை பிசைந்துகொண்டு செய்வதொன்றும் அறியாது பதறினுள். எழில் அறைவாங்கிய கன்னத்தை தடவியபடி எழுந்து நின்றான். கண்ணபிரான் தன் கைத்தடியால் அவன் தலையில் ஓங்கி அடித்தார். எழிலின் தலையிலிருந்து இரத்தம் கசிந்தது. "மாதவி, 'அத்தான்' என்று கதறியபடி அவனிடம் ஓடிவந்து அவனுடைய தலையில் வடிந்த இரத்தத்தை துடைத்தாள்.

"ஏய், நீ போடி உள்ளே" என்று கத்தினர் கண்ணபிரான்.

"மாதவி! பார் இதுதான் 'காதலின் பரிசு' நான் போய் வருகிறேன். எனக்கு இது சர்வசாதாரணம்" என்று அங்கிருந்து மெல்ல தள்ளாடியபடி நடந்தான் எழில். கண்ணபிரானும் மன் னரும் சேர்ந்து பயங்கரமாகச் சிரித்தார்கள். மாதவி கண்களில் இருந்து வடியும் கண்ணீரை துடைத்தபடி எழில் போவதையே பார்த்துக்கொண்டிருந்தாள். காதலுக்கும் கண்ணீருக்கும் இடையே கலங்கின இரண்டு உள்ளங்கள்—ஆணவத்திற்கும் அநீதிக்கும் இடையே சிரித்தன இரண்டு உருவங்கள். முன்னவை வாழவேண்டிய ஜோடிப் பறவைகள். பின்னவை வாழ்வை அழிக் கும் பிணம் தின்னிக் கழுகுகள்.

ஒழுக்கம் விழுப்பந் தரலான் ஒழுக்கம்
உயிரினும் ஓம்பப் படும் —குறள்.

# 17. மனிதனுறன்

'ஓட்டல் பேரடை'ஸின் படிக்கட்டுகளில் விசில் அடித்தபடி ஆனந்தமாக ஓடி '33'-ம் நம்பர் அறையின் கதவை 'மல்லிகா, மல் லிகா' என்று அழைத்தபடி திறந்த கண்ணன் 'தேள்' கொட்டிய வனைப்போல் அலறிவிட்டான். அங்கே—மல்லிகாவைக் காண வில்லை. ஆனுல்? வெல்வெட்டு மெத்தையில் உட்கார்ந்தபடி அவ

னையே பார்த்துக்கொண்டிருந்தான் இளங்கோ. "நீங்கள், நீங்கள்........." என்று தடுமாறினான் கண்ணன். "ஆம்! நான் தான்—மல்லிகாவின் மணாளன்" என்றான் இளங்கோ அமைதியுடன்.

கண்ணன் ஒன்றுமே பேசமுடியாமல் 'திரு திரு'வென விழித்தான். "கண்ணா! இங்கே வா, இப்படி உட்கார். பயப்படாதே நான் ஒன்றும் செய்துவிட மாட்டேன். நான் இங்கு ஏன் வந்திருக்கிறேன் தெரியுமா?" என்றான் இளங்கோ பீடிகையுடன். "உங்கள் மனைவியைத் தேடி........." என்றான் கண்ணன் மெதுவாக. "இல்லை! என் மனைவியைத் தேடி நான் இங்கு வரவில்லை. உணர்ச்சிவசப்பட்டு உருக்குலைந்து போகப் போகும் ஒரு வாலிபனைக் காப்பாற்ற வந்திருக்கிறேன்" என்று கூறிவிட்டு கண்ணனின் கண்களை ஊடுருவினான் இளங்கோ. அவன் தலையை குனிந்து கொண்டான். "தம்பி வெட்கப்படாதே. வேதனைச் சுழலில் சிக்கப் போகும் நீ வருங்காலத்தை எண்ணிப்பார். உன்போன்ற இளைஞர்கள் 'பல்கலை'ப் பயின்று பாருக்கே ஒரு ஒளி விளக்காக திகழ வேண்டும். அத்தகைய நீயோ, கேவலம் ஐம்புலனையும் அடக்கியாள முடியாமல் அழித்துக் கொள்கிறாய் உன் வாழ்வை. பள்ளிக்குச் சென்றோம், பாடத்தைப் படித்தோம், பாழ்பட்ட சமுதாயத்தை புதுப்பிக்கும் பணியிலே ஒத்துழைப்போம் என்று நல்ல எண்ணங்களை எண்ண வேண்டிய நீ 'அரி பரந்தாமன்' விட்டுச் சென்ற ஆராய்ச்சிகளைத் தொடர்ந்து நடத்துவது படித்தவர் கூட்டத்திற்கே ஒரு களங்கம்" என்று கூறிய இளங்கோ பேச்சை நிறுத்திவிட்டு கண்ணனை நோக்கினான். அவன் இளங்கோவையே பார்த்துக் கொண்டிருந்தான்.

"தம்பி! உனக்கு என் போக்கு ஒரு புதிதாகவே தோன்றும். மனைவியின் கள்ளக் காதலனுடன் இவ்வளவு சாந்தமாகப் பேசும் இவனும் ஒரு மனிதனா? ஆண்மை உள்ளவன் தானா? என்றுகூட எண்ணமிடுவாய். தம்பி நான் ஒரு ஓவியன் மட்டுமல்ல, உலகத்து மாந்தரின் மனதை எடை போடத் தெரிந்த ஒரு மனிதனும் கூட. நான் கண்ட ஆராய்ச்சியில் உன் போன்ற இளைஞர்கள் மிகவும் எச்சரிக்கையுடன் நடந்துகொள்ள வேண்டும். தவறியவர்கள், துன்பமெனும் மாளாத துயரக் கடலில் மூழ்கி தங்கள் வாழ்நாள் பாழ்பட்டதை எண்ணி 'இரத்தக் கண்ணீர்' வடிப்பார்கள். தம்பி, உனக்கு காதலைப் பற்றித் தெரியுமா? நீயும் நினைத்துக் கொண்

டிருக்கிருயே மல்லிகாவை காதலிப்பதாக. நெஞ்சில் கைவைத்து நேர்மையுடன் சொல், நீ கொண்டது உண்மையான தெய்வீகக் காதலா? சொல்...... சொல்'' என்று அவனைப் பிடித்து உலுக்கினுன் இளங்கோ. கண்ணனின் கண்கள் மெல்ல கலங்கின. "தம்பி! அழுகிருயா? அழு...... நன்ருக அழு! ஆனுல் தயவு செய்து நீ செய்துவிட்ட பொல்லாத செயலால் நான் எவ்வளவு அழுதிருப்பேன் ஏதேது சொல்லி புலம்பியிருப்பேன் என்று சற்று நினைத்துப் பார்த்துவிட்டு அழு'' என்ருன் இளங்கோ.

"அய்யோ! போதும், போதும்......... என்னை மன்னித்து விடுங்கள்! என்னை மன்னித்து விடுங்கள். உத்தமராகிய உங்களுக்கு மாபெரும் துரோகம் செய்துவிட்டேன் மனிதன் செய்யக் கூடாத மிருகச் செயல் ஒன்று செய்துவிட்டேன். அய்யா, அய்யா...... என்னை மன்னித்து விடுங்கள், அறிவு மயங்கி அற்ப காம சுகத்திற்கு அடிமையாகி யாருமே மன்னிக்க முடியாத மாபெரும் செயல் செய்துவிட்ட என்னை மன்னித்து விடுங்கள்'' என்று இளங்கோவின் கால்களில் விழுந்து கதறினுன் கண்ணன்.

"தம்பி! எழுந்திரு தவறு செய்யாதவன் சிறந்தவனல்ல செய்த தவறை திருத்திக்கொள்பவன்தான் சிறந்தவன். தம்பி! 'ஆசை அறுபது நாள் மோகம் முப்பது நாள்' என்ற பழமொழி உன் வரையில் உண்மையாகிவிடக் கூடாது. நீ கொண்ட போலிக் காதலை கொன்று குழி தோண்டி புதைத்து அதற்கு சமாதி கட்டி விட்டு உன்னுடைய உண்மைக் காதலை—தெய்வீகக் காதலை மல்லிகாவிடம் காட்டு. அவள் என்னை மணந்து கொண்டவள்தான். ஆனுல் இன்பம் என்பதே இன்னதென்று தெரியாதவள். மணமானவள்தான் அவள் ஆனுல் நுகரப்படாத புதுமலர். கல்யாணமானவளாக இருந்தாலும் களங்கப்படாத கன்னியவள். அவளை நீ மறுமணம் செய்துகொள். நீயும் ஒரு புது மனிதனுக வாழ முயற்சி செய்'' என்று இளங்கோ சொல்லி முடிக்குமுன் கண்ணன், "அய்யோ! மறுபடியும் என்னைத் தவறு செய்யத் தூண்டாதீர்கள்'' என்ருன்.

"தவறு! தம்பி எது தவறு. நான் என் வாழ்நாளில் செய்த ஒரே தவறு மல்லிகாவின் வாழ்வை வறண்ட கானல் வெளியாக மாற்றிவிட்டது. ஆனுல் நீ செய்யும் தவறு அந்தப் பாலைவனத்தில் சோலைகள் பூத்துக் குலுங்க வாய்ப்பளிக்குமப்பா'' என்ருன் இளங்கோ.

"ஏதேதோ சொல்கிறீர்களே. நீங்கள் செய்த அந்த ஒரே தவறு என்ன?" என்ருன் கண்ணன். "உனக்குச் சொன்னுல் விளங்காது. ஆனுல் இதை மட்டும் தெரிந்துகொள். நான் மல்லிகாவை வெறுக்கவில்லை மாசற்ற அன்பை செலுத்தினேன்—மாருத காதலைப் பொழிந்தேன் அவள்மேல். என் ஓவியத் திறமையையெல்லாம் ஒன்று திரட்டி அவளை ஓவியங்களாகவே வரைந்து தள்ளினேன். ஆனுல்...... ஆனுல்......" அதற்கு மேல் அவனுல் பேச முடியாமல் தொண்டை அடைத்துக் கொண்டது.

"ஆனுல்! ஆனுல்... என்ன? சொல்லுங்கள்?" என்று அவனை வற்புறுத்தினுன் கண்ணன். அப்போது படிகளில் யாரோ ஏறி வரும் சப்தம் கேட்டதும் இளங்கோ, "அதோ யாரோ வருகிருர்கள். தம்பி அது அவளாகத்தான் இருக்க வேண்டும். நான் போய் வருகிறேன். இங்கு நான் வந்ததை அவளிடம் கூறி விடாதே" என்று கூறிவிட்டு இளங்கோ ஓடி மறைந்துவிட்டான். கண்ணன் பிரமை பிடித்தவனைப் போல் நின்றுகொண்டிருந்தான்.

எவ்வளவு நேரம்தான் அப்படியே நின்று கொண்டிருந்தானே? திடீரென்று "கண்ணு" என்று மல்லிகாவின் இனிய குரல் கேட்டு தீயை மிதித்தவனைப் போல் திரும்பினுன். அங்கே— மல்லிகா நின்று கொண்டிருந்தாள் கன்னங்குழிய சிரித்தபடி. கண்ணனின் கண்கள் அவளைப் பார்க்கப் பார்க்க சிவந்தன. பற்களை 'நர நர' வென கடித்துக் கொண்டு ஓங்கி அவள் கன்னத்தில் மாறி மாறி அறைந்தான். "ஆ" வென்று அலறியபடி கட்டிலில் போய் விழுந்தாள் மல்லிகா. அவளுடைய குரல்வளையை நெரித்தபடி "வஞ்சகி...... காதகி......" என்று கத்தினுன்.

"கண்ணு, கண்ணு......" என்று அடித்தொண்டையில் மெல்ல கத்தினுள் மல்லிகா. "ஆம்-நீ சாகக் கூடாது, மல்லிகா நீ சாகக் கூடாது. போ! இப்போதே போ. உன் கணவனைக் கண்டு அந்த உத்தமனின் கால்களை உன் கண்ணீரால் கழுவிய பின் அவன் கைகளாலேயே 'ஒரு துளி விஷத்தை' அமுதென வாங்கிக் குடித்து இந்த உனது வகை கெட்ட சிற்றின்ப வாழ்விற்கு முற்றுப் புள்ளி வைத்துவிடு, போ" என்று கூறினுன் கண்ணன். அவனுடைய கரங்கள் அவளுடைய கழுத்தைவிட்டு நழுவின.

"கண்ணு நான் சாகத்தான் வேண்டுமா? கண்ணு இனி அவர் முகத்தில் எப்படி விழிப்பேன்?" என்று அழுதாள் மல்லிகா.

"அந்த உத்தமனுக்குத் துரோகம் செய்யத் துணிந்த நீ, அவனிடம் மீண்டும் சென்று மன்னிப்புக் கோர துணிவு இல்லாதவளாக இருக்கிருய்" என்று பயங்கரமாக சிரித்தான் கண்ணன்.

"கண்ணு! அவர் ஆண்மையுள்ளவராக இருந்திருந்தால் என் வாழ்வும் ஒழுங்காக நடந்திருக்கும்" என்று விம்மினுள். "கண்ணு இயற்கையே எனக்கு எதிராக இருக்கும்போது நான் எப்படி ஐம்புலனையும் அடக்கி ஆள முடியும். மனக்குமுறலை மறக்க மலர்களின் எழிலைக்கண்டு இரசித்தேன். ஆனுல் அங்கும் வண்டு அதன் தேனை நுகருவதைக் கண்டேன்—புருவிடம் போய் என் தொல்லைகளைச் சொன்னேன் அதுவும் ஒன்றை ஒன்று தழுவுவதைக் கண்டேன்—மாலைக் கதிரவனை மனதிலே நினைத்து மன அமைதி பெற முயன்றேன். ஆனுல் அங்கும் அக் கதிரோன் ஆழியை அணைத்து முத்தமிடக் கண்டேன் கண்ணு! என் மனதிலே சுடர்விட்டு எரிந்த காமத் தீயை அணைக்க ஆண்டவனின் கோவிலை நாடினேன். ஆனுல், அய்யோ! அங்கும் எனக்கு அறிவுரை பகர யாரும் இல்லை. காம இச்சையைத் தணிக்க தான் பெற்ற மகளையே புணர்ந்த பிரம்ம தேவனையும்— அடங்காத ஆசையால் அநீதி என்றும் பாராமல் தன் குரு பத்தினியையே 'அணைத்த' அயோக்கிய ஆண்டவர்களையும்—உலகத்திற்கே ஒப்பற்ற 'கீதை'யை தந்தாராம் கண்ண பரமாத்மா. ஆனுல் அந்தோ அவரும் அழகிகளின் சேலையை கவர்ந்து அவர்களை நிர்வாணமாக்கி ஆட்டம் போட்ட அபூர்வ காட்சிகளை அழகாக கோவில் சுவர்களில் சிலையாக, சிற்பமாக வரைந்திருப்பதைக் கண்டேன். 'காலட்சேபம்' கேட்டாவது கருத்தை இழக்காமல் இருப்போம என்று எண்ணினேன். ஆனுல், அந்தோ!...... தன்னை பெற்ற தாயை புணர்ந்து கொண்டிருக்கையில் அதை பார்த்துவிட்ட தந்தையையும் கொன்ருனும் ஒருவன். ஆனுல் அவன் ஆண்டவனின் நற்ருள்களை தொழுது பொற்ருமரை குளத்தில் மூழ்கி எழுந்ததும், சுவர்க்கத்தின் கதவுகள் அவனுக்காக திறந்திருந்ததாம். இதுதான் அவர் மக்களின் முன் பக்தியுடன் போதித்தது. நான் அதையும் கேட்டேன், அறிவை இழந்தேன். செய்யக் கூடாதவைகளை செய்துவிட்டு பாப மன்னிப்பு பெற்றுக்கொள்ளலாம் என்று இறுமாந்திருந்தேன். ஆனுல் கண்ணு! கற்பை இழந்த நான் என் கணவனிடம் சென்று புராணத்தில் யாரோ ஒரு கற்புக்கரசி கூறினுளாமே 'மனதால் நாவால் மாசுற்றேனுகில், தீயே நீ என்னை சுடு'

என்று அதுபோல் சொல்வதா? கண்ணு, நாம் தவறு செய்தது செய்துவிட்டோம். இனியாவது இருவரும் புதுத்தவறுகள் செய்யாமல் காதல் வாழ்வு வாழ்வோம்" என்று அவனிடம் நெருங்கி அவனுடைய கன்னத்தை தடவினுள் மல்லிகா.

கண்ணன் சிறிது நேரம் நிலை தடுமாறினுன். ஆனுல் மறு கணம் சுய உணர்வு பெற்று "மல்லிகா, வேண்டாம். நான் மனிதனுகிவிட்டேன். இன்று தான் மனிதனுனேன். இனிமேலும் அதே தவறை நான் ஒரு போதும் செய்ய மாட்டேன்" என்றுன் உறுதியுடன்.

"கண்ணு! கண்ணு, என்னைக் கைவிடாதே! என்னைக் கைவிடாதே. என்னைக் கைவிடாதே" என்று மல்லிகா அவனை அணைத்துக் கொண்டாள். கண்ணன் 'சீ! விடு என்னை" என்று ஓங்கி அவளுடைய கன்னத்தில் இன்னொரு அறை கொடுத்தான். அறையை வாங்கியபடி படுக்கையில் சாய்ந்த மல்லிகா அழுதாள், நெடுநேரம் அழுதாள்! தலையணை நனையும் வரையில் அழுதாள்.

அன்று இரவு நெடுநேரம் வரை கண்ணன் தூங்கவே இல்லை. அவன் செவிகளில் மல்லிகாவின் விம்மல் ஒலி நெடுநேரம் ஓயாமல் கேட்டுக் கொண்டே இருந்தது. அதுவும் மெல்ல மெல்ல தேய்ந்து ஓய்ந்தது. பின் மல்லிகா தூங்கினுள். கண்ணன் மெல்ல கண்களை மூடினுன் அந்த அறையில் மயான அமைதி ஆட்சி நடத்தியது- அவர்களின் உள்ளங்களைப்போல். காலதேவனின் இதயத் துடிப்பு அந்த அறையில் உள்ள கடிகாரத்தின் மூலம் கேட்டது.

இனம்போன் றினமல்லார் கேண்மை மகளிர்
மனம்போல் வேறு படும் —குறள்.

# 18. கைம்பெண்

கண்களில் தீப்பொறி பறக்க கண்ணபிரானை முறைத்துப் பார்த்தபடி நின்று கொண்டிருந்தான் மன்னுர். கண்ணபிரான் அவனை அலட்சியமாகப் பார்த்தபடி "மன்னுர் வீணுக முறைப்பதில் பயனில்லை. வேண்டுமானுல் இந்த 'பத்தாயிரத்துடன்' போய்விடு. அதற்கு மேல் நீ தலை கீழாக நின்றுல் கூட கால்காசு பிறலாது," என்று கூறியபடி அவனருகில் தரையிலிருந்த 'டீ'

பாயின் மேல் பணத்தைப் போட்டார் கண்ணபிரான். "நாம் முன்பு பேசியபடியே இப்போதும் நீர் நடந்து கொள்வது நல்லது" என்ருன் மன்னுர்.

'கல கல'வென சிரித்த கண்ணபிரான், "மன்னுர்! உன் ஜம்பமெல்லாம் இனியும் என்னிடம் சாயாது" என்ருர். "என்னையும் அந்த அப்பாவி எழிலன் என்று எண்ணிவிடாதீர்," என்ருன் மன்னுர் கர்வத்துடன். "அந்த 'சலசல'ப்புக்கெல்லாம் இந்த நரி பயந்து விடாது" என்ருர் கண்ணபிரான் ஏளனமாக. "சொன்ன சொல்படி நடக்கப் போகிருயா இல்லையா?" என்று உறுமினுன் மன்னுர். "மன்னுர் மரியாதையை நழுவவிடுகிருய்" என்ருர் கண்ணபிரான். "மரியாதை, ஏமாற்றுவித்தையில் கைதேர்ந்தவனே உனக்கு மரியாதை வேரு. கடைசி முறையாகக் கேட்கிறேன் என்ன உன் பதில்" என்ருன் கண்டிப்பாக. கண்ணபிரான் அலட்சியமாக "பதில் முன்பே கொடுத்தாகிவிட்டது" என்ருர்.

"கொடுக்க முடியாதா?"

"முடியாது"

"முடியாதா?"

"முடியாது, முடியாது, முடியாது."

"முடியாது......"

மன்னுர்சாமி பயங்கரமாகச் சிரித்தான். அவன் சிரிப்பதைக் கண்ட கண்ணபிரான் கூட பயந்துவிட்டார். மன்னுர் சிரித்தவாறு தன் கைத்தடியின் பிடியைப் பிடித்து திருகி இழுத்தான். தடியினுள் மறைந்திருந்த கத்தி வெளிப்பட்டு 'பள பள' வென மின்னியது. மின்னும் கத்தியை பார்த்த மன்னுர் மேலும் பயங்கரமாகச் சிரித்தான். கையில் கத்தியை ஏந்தியவாறு மெள்ள மெள்ள கண்ணபிரானை நோக்கி நடந்தான் மன்னுர். அவனுடைய கண்கள் வெறி பிடித்த ஓநாயின் கண்களைப் போல் ஜொலித்தன. கண்ணபிரான் நடுங்கியபடி பின்னுல் நடந்தார். மன்னுர் நெருங்கிக் கொண்டே இருந்தான். கண்ணபிரான் நடுங்கியபடி பின்னுல் நடந்தார். மன்னுர் நெருங்கிக் கொண்டே இருந்தான். கண்ணபிரான் உடனே மேஜை டிராயரைத் திறந்து கைத்துப்பாக்கியை எடுத்தார். ஆனுல் அவருக்கு முன் பாய்ந்த மன்னுர் மாறி மாறி அவர் நெஞ்சில் கத்தியால் குத்திவிட்டான்.

கைத்துப்பாக்கி முன்னே விழ அதற்குப் பின்னால் கண்ண பிரான் தலை குப்புற விழுந்தார். அவருடைய மார்பிலிருந்து வடியும இரத்தத்தைக் கண்ட மன்னூர் பயங்கரமாகச் சிரித்தான். காலால் கண்ணபிரானை உதைத்துப் புறட்டி அவருடைய சட்டைப் பையிலிருந்த பெட்டிச் சாவியை உருவிக் கொண்டு மீண்டும சிரித்துவிட்டு பணப்பெட்டியை நெருங்கி தன்னுடைய மேல் துண்டில் 'கரன்ஸி' நோட்டுகளை அடுக்கி மூட்டையாகக் கட்டினான். சிரித்தபடியே சந்தோஷத்துடன் பண மூட்டையை சுமந்தவாறு படிகளில் இறங்க ஆரமபித்த மன்னூர் 'ஆ! அய்யோ' வென்று அலறியபடி தலைக்குப்புற படிகளில் உருண்டான். புகைக்கும கைத்துப்பாக்கியை கையில் ஏந்தியவாறு தட்டுத் தடுமாறி எழுந்து நின்ற கண்ணபிரான் "பழிக்குப்பழி பழிக்குப்பழி......" என்று கூறியவாறு இரண்டடி நடந்தவர் தரையில் உருண்டார். அவருடைய உயிரற்ற உடலின் வாயிலிருந்து இரத்தம வடிந்தது.

'சூடு' சப்தம் கேட்டு அடுக்களையிலிருந்து ஓடிவந்த மாதவி அங்கே மாடிப் படிகளில் இரத்தக்கறை படிந்திருப்பதையும் கீழ் படியில் மன்னூர் கண்கள் இரண்டையும் பாதி திறந்தபடி செத்துக் கிடப்பதையும், அவனுடைய கைகள் பண மூட்டையை இறுகப் பற்றிக் கொண்டிருப்பதையும் கண்டு வாய்விட்டு அலறி விட்டாள்.

போலீஸார் வந்தனர் 'ரிப்போர்ட்' எழுதிக் கொண்டு நடையைக் கட்டினர். பிரேதங்கள் சோதனைக்கு அனுப்பப்பட்டன. வந்திருந்த உறவினர் மாதவியை கட்டிக்கொண்டு அழுதனர். மாதவியின் நெற்றித் திலகத்தை அழித்தாள் ஒருவள்-அவளுடைய வளையல்களை உடைத்தாள் மற்றொருவள்-அவளுடைய தாலியை அப்போதே அறுத்தெறிய துடித்தாள் வேறொருவள். மாதவி-ஆம, அவள் இனி விதவை.

வேதனைப்படும் மாதவிக்கு ஆறுதல் சொல்ல இனி யாருமே இல்லை. அவளுடைய ஒரே ஆதரவான தாயும் படுத்த படுக்கையாகி இறுதியில் அவளுடைய திருமணத்தன்று மனமுடைந்து என்றுமே மாளாத தூக்கத்தில் ஆழ்ந்துவிட்டாள்.

அன்று மாதவியின் திருமண நாள். கண்ணிறைந்த கணவனுடன் இனிது வாழலாமென்று மனக்கோட்டை கட்டிய மாதவி வயோதிக 'மாப்பிள்ளையிடம்' கழுத்தை நீட்டி 'தாலி' என்ற

'அடிமை விலங்கை' பூட்டிக்கொண்டது அவள் வாழ்வில் மறக்க முடியாததோர் நாள். அய்யர் பார்த்து வைத்த அருமையான நாள். முப்பத்துமுக்கோடி தேவர்களும் அவள் திருமணத்திற்கு அழைக்கப்பட்ட அற்புதமான நாள். ஓமகுண்டத்திலே அவி சொரிந்து அர்த்தமற்ற வறட்டுக் கூச்சலுக்கிடையே- புரியாத 'மொழி'யில் அனந்த சயனம் அய்யங்கார் முன்னிலையில் மாதவி கண்ணபிரானின் அடிமையான அற்புதமான நாள்.

அன்று, திருமணம் முடிந்து மக்களின் ஆசிபெற்ற மணமக்கள் மாதவி-கண்ணபிரான் இருவரும் அம்மி மிதித்து அருந்ததி பார்த்து அரசாணிக் காலை சுற்றி முடிந்து பெரியவர்களின் ஆசீர்வாதத்தைபெறும் சமயம். மாதவி மணக்கோலத்துடன் தன் தாயின் பாதங்களில் விழுந்து வணங்குவதற்கு அவளுடைய அன்னை தங்கம் படுத்த படுக்கையாக கிடந்த அறையினுள் தன் 'கிழட்டுக் கணவனு'டன் நுழைந்தாள். அங்கே-தன் மகளை மணக்கோலத்திலே கிழவனின் மனைவியாக பார்த்த தங்கம் நெஞ்சம் வெடித்து மஞ்சத்திலிருந்து விழுந்து இறந்தாள்.

அய்யர் வந்தார் 'அநியாயமான தோஷம்' உண்டு, தம்பதிகள் ஒன்று சேர ஓர் ஆண்டுகளாகும் அப்படி ஆகாவிட்டால் தம்பதிகள் இருவரில் ஒருவர் சாக நேரிடும்' என்று ஆரூடம் கணித்தார். அய்யரின் கையிலே ஆயிரமாக பணம் திணிக்கப்பட்டு ஆண்டு ஒன்றாக இருந்த அவிட்டம் மாதம் ஒன்றாக மாற்றப்பட்டது. தம்பதிகளின் முதலிரவு ஒத்திவைக்கப்பட்டது. ஆனால் முதலிரவு காண வேண்டிய நாளுக்கு முன்னாள் கண்ணபிரான் கண்ணை மூடி விட்டார். பாவம் மாதவி தன்னந்தனியளாகவிடப்பட்டாள். குங்குமம் இழந்து-வளையல் அணிய அருகதையற்று-அலங்காரம் செய்ய அனுமதியின்றி-பட்டுடலை வெள்ளாடையால் மறைத்து-விதவைக் கோலம் பூண்டாள்.

அவளுக்கு இனி யாருமே ஆதரவில்லை. எழில்-ஆம் அவன் ஒருவன் தான். ஆனால் அவனும் இப்போது அவளருகில் இல்லை. எங்கே சுற்றுகிறானோ? என்னென்ன செய்கிறானோ? எப்படியெப்படி வேதனைப்படுகிறானோ? என்று நினைக்கும்போது அவள் அனலில் விழுந்த புழுவெனத் துடித்தாள்.

அவளுக்கு ஆறுதல் சொல்ல வருபவர்கள் 'யாவும் அவன் செயல்' என்றார்களே தவிர அவளுடைய மன அரிப்பிற்கு-

இளமை நினைவுகளை எண்ணி ஏங்கும் உள்ளத்திற்கு—அவளது வேதனை வாழ்விற்கு வழி சொல்ல யாருமே முன் வரவில்லை. வாழ வேண்டிய அவளுக்கு அவர்கள் சூட்டிய பெயர்—புதுப் பெயர்—பட்டப்பெயர் அழகான பெயர் 'கைம்பெண்.'

**எளிதென இல்லிறப்பான் எய்துமெஞ் ஞான்றும்**
**விளியாது நிற்கும் பழி —குறள்**

# 19. அபாய அறிவிப்பு

கிழக்கே கதிரவன் தோன்றினன். கடல் திரைகள் கரையில் மோதி ஆர்ப்பரித்தன. சேவல்கள் வாழ்த்தி வரவேற்றன. இருள் பயந்து ஓடியது—ஒளி துணிந்து துரத்தியது. எங்கும் புத்தொளி—எங்கும் இன்பம். துயில் களைந்து புத்துணர்ச்சி பெற்ற மக்கள் என்றும் போல் அன்றும் வழக்கம்போல் தங்களுடைய வாழ்க்கைச் சக்கரத்தை உருட்ட ஆரம்பித்தனர்.

கண்ணன் 'மல்லிகா, மல்லிகா......!' என்று அலறியவாறு படுக்கையிலிருந்து உருண்டு விழுந்தான். அவனுடைய உடல் 'கிடுகிடு'வென நடுங்கியது. தான் கண்டது வெறும் கனவு என்பதை தெரிந்து கொண்டபின்தான் அவன் உடல் சிறிது அமைதியுற்றது. மல்லிகாவின் படுக்கையை பார்த்த கண்ணன் திடுக்கிட்டான். அங்கே—அவளைக் காணவில்லை. கண்ணன் சட்டென்று திரும்பி அவளுடைய பெட்டி இருந்த பக்கம் நோக்கினன். அங்கே அவளுடைய பெட்டியைக் காணவில்லை. கண்ணன் மெல்ல நடந்து மேஜையை அடைந்தான். அங்கே அவனுடைய கண்களுக்குத் தெரியும்படி வைக்கப்பட்டிருந்தது ஒரு வெள்ளை நிறக் கடிதம். கண்ணன் துடிக்கும் உள்ளத்தை அடக்கிக் கொண்டு நடுங்கும் கரங்களால் கடிதத்தை எடுத்து படிக்க ஆரம்பித்தான்:

கண்ணா,

என் வாழ்க்கையில் இன்பம் காண உன்னை நாடினேன். ஆனல் நீயோ இன்று என்னை வெறுக்கிருய். என் கணவனிடம் திரும்பிச் செல்லும்படி வற்புறுத்துகிருய். கண்ணா, நான் சோரம்

போனவள் என்று தெரிந்த பின்னும் என் கணவர் என்னை ஏற்றுக் கொள்வாரா? அது நடக்காத காரியம். நான் ஒரு முறை என் வாழ்க்கையில் தவறினேன். இனி தவறியவள், தவறியவளாகவே தான் வாழ முடியும். நான் முறிந்த பால்—பாசி படிந்த தடாகம்—உடைந்து போன மண்பாண்டம். என் கணவர் எனக்கு 'இன்ப சுகம்' இன்னதென்று காட்டத் தவறினரே தவிர என்னிடம் அன்பு காட்டத் தவறவில்லை. அவர் களங்கமற்ற உள்ளம் படைத்த உத்தமர். அவருக்கு எனது 'தூய்மையற்ற' உடலை ஒப்படைக்க என் மனசாட்சி இடந்தரவில்லை. ஆகையால் நான் போகிறேன், அடுத்த அறையில் உள்ள 'சீர்திருத்தவாதி' மோகனுடன், இனி நீ உன் விருப்பம் போல் தூயவாழ்க்கை நடத்தலாம்.

—மல்லிகா

கடிதத்தைப் படித்த கண்ணன் இடிந்து போய் உட்கார்ந்து விட்டான். அவன் கண்கள் அப்படியே இமைக்காமல் நின்றுவிட்டன. அங்கே அவனுடைய கண்களுக்கு இளங்கோ நிற்பது மங்கலாகத் தெரிந்தது. "நீங்கள்......நீங்கள்" என்று தடுமாறினன் கண்ணன். "ஆம் நான்தான்......" என்று பயங்கரமாகச் சிரித்தான் இளங்கோ. கண்ணன் பதறினன்—இளங்கோ நெருங்கினன். "அமைதியாக இருந்தவளின் வாழ்வில் களங்கத்தை ஏற்படுத்திவிட்டாயடா கயவனே! குடும்பப் பெண்ணுக இருந்தவளின் வாழ்வில் விபச்சார படுகுழியை வெட்டிவிட்டாயடா வஞ்சகா! வாழ வேண்டியவளை ஏழ முடியாதவளாக்கிவிட்டாயடா குடிகேடா!" என்று சொல்லிக் கொண்டே கண்ணனின் குரல்வளையைப் பிடித்து நெறித்தான் இளங்கோ. "ஆ! அய்யோ" என்று பயங்கரமாக அலறியபடி கீழே சாய்ந்தான் கண்ணன். அவனுடைய உடலில் வேர்வைத் துளிகள் துளிர்த்தன. நடந்தது வெறும் கற்பனை என்பதை நினைத்து சிறிது ஆறுதல் அடைந்தான் கண்ணன். அப்போது—

யாரோ விம்மி விம்மி அழும் குரல் கேட்டுத் திடுக்கிட்டுத் திரும்பினன். அங்கே! சுவற்றில் சாய்ந்தபடி கைகளால் தன் முகத்தை மூடியவாறு அழுது கொண்டிருந்தாள் மல்லிகா. கண்ணன் மெல்ல நடந்து அவளருகே சென்ருன். அவள் "பாவி பார் என்னை......... உன்னல் வாழ்விழந்து திரியும் என்னைப் பார்.

உன்னுடைய அயோக்கியத்தனத்திற்கு அடிமையான என்னைப் பார்...... கண்ணியமான வாழ்க்கை நடத்திய நான் இன்று பார்ப் போர் பழி பேசும் விபச்சாரியாக மாறிவிட்டதைப்பார். பாரடா, நன்றாகப் பார்'' என்று கூறி அழுதாள். ''மல்லிகா...... மல் லிகா......!'' என்று அவளுடைய கைகளை விலக்கினான் கண்ணன். மறுகணம் அவன் தேள் கொட்டியவனைப் போல் அலறினான். அங்கே-மல்லிகாவுக்குப் பதிலாக அவனுடைய தாய், பத்து மாதம் சுமந்து பெற்ற தாய் நின்று கொண்டிருந்தாள். அவன் அலறி னான். பயங்கரமான அவனுடைய அலறல் ஒலி அந்த அறையின் நான்கு மூலையிலும் எதிரொலித்தது. ''அய்யோ அம்மா நீங் களா?'' என்று அலறினான். மறுகணம் அங்கே அவனுடைய தாய்க்குப் பதில் அவன் அன்புத் தமக்கை நின்று கொண்டிருந் தாள். ''அய்யோ அக்கா!'' என்று கத்தியதும் அவனுடைய அக் காள் மறைந்து அங்கே அவனுடைய தங்கை கண்களில் நீர்வடிய நின்று கொண்டிருந்தாள். ''அய்யோ! நான் பாவி......... நான் வஞ்சகன்...... அய்யோ நான் அநியாயக்காரன்,'' என்று அலறிய படி சுவற்றில் மோதிக் கொண்டான். அவனுடைய கண்கள் இருண்டன. அங்கே அவன் முன்–மல்லிகா, அவன் தாய், தமக்கை, தங்கை ஆகியோர் மாறி மாறி தோன்றினர். அவன் தலையில் யாரோ சம்மட்டியால் அடித்துக் கொண்டு 'மல்லிகாதான் உன் தாய்–மல்லிகாதான் உன் தமக்கை–மல்லிகாதான் உன் தங்கை' என்று உரத்த குரலில் கத்துவதுபோல் தோன்றியது.

கண்ணன் இருந்த அறையில் மாட்டப்பட்டிருந்த படங்கள் தூள்தூளாக நொறுங்கி விழுந்தன–அவன் அருகே இருந்த மின் சார விளக்கு வெடித்து சிதறியது-கட்டில் வெந்து கருகியது, சுவர்கள் பெயர்ந்து அவன் மேல் விழுந்தன–தரை வெடித்து அந்த அகன்ற வெடிப்பில் அவன் தலை குப்புற விழுவதுபோல் உணர்ந்தான். அய்யோ மல்லிகா! மல்லிகா, நீ என் தாய்–நீ என் தமக்கை–நீ என் தங்கை. அய்யோ மல்லிகா! மல்லிகா! உற்ற வளைத் தவிர மற்றவரை தாயாக மதிக்கும் தமிழன் பரம் பரை யில் மாசாக வந்தவன் நான்...... மாசாக வந்தவன் நான். அய்யோ! மல்லிகா, மல்லிகா......'' என்று பயங்கரமாக அலறிய படி கண்களை மூடிக்கொண்டு ஓடினான். அங்கே–அவன் முன் பிருந்த சன்னல் அவனுக்கு கருணையுடன் வழிவிட்டது. கால் இடறி 'ஓட்டல் பேரடைசின்' ஏழாவது மாடியிலிருந்து தலை குப்புற விழுந்தான் கண்ணன்.

அவனுடைய உடல் சிதறி உருக்குலைந்து போய்விட்டது. அவனுடைய மனசாட்சி அவனை கொன்றுவிட்டது. சாக்காட்டில் மூழ்கிக் கிடந்த அந்த இளைஞனின் உடலிலிருந்து வடிந்த இரத்தம் சாலையின் குறுக்கே ஓடி அந்த தார் ரோட்டில் சிவப்பு நிற கோட்டைக் கிழித்தது. அது—உலகில் அற்ப காம சுகத்திற்கு அடிமையாகி தன் வாழ்விற்கு தானே குழி பறித்துக் கொண்ட பரிதாபத்திற்குரியவனின் கடைசி எல்லை—பிஞ்சுலே பழுத்தவனின் பித்தலாட்டங்களுக்கு இறுதிக்கோடு-கண்ட பெண்களை எல்லாம் பெண்டாள நினைக்கும் பேதையருக்கு ஒரு 'அபாய அறிவிப்பு' என்பதை அங்கு கண்ணனின் சவத்தைச் சூழ்ந்து நின்ற யாருமே உணரவில்லை.

தன் காம இச்சைக்காக பகுத்தறிவை அடகு வைத்துவிட்டு அயோக்கியத்தனம் புரிந்த அந்த இளைஞன் கண்ணீர் வடிக்க யாருமே அருகிலில்லாத நிலையில் நொறுங்கிய எலும்புகளுடன்—சிதறிய உடலனைய் 'ஓட்டல் பேரடைசின்' முன் செத்துக் கிடப்பதைக் கண்டு பலர் பலவிதமாக பேசிக்கொண்டனர். ஆனால் ஒருவருக்குக் கூட அவனுடைய சின்னஞ்சிறு வாழ்க்கையிலே கடந்து போன கயமைச் செயல்கள் என்ன என்பதை எடை போடும் திறமை இல்லாமல் போய்விட்டது.

அன்பிலா ரெல்லாந் தமக்குரியர் அன்புடையார்
என்பு முரியர் பிறர்க்கு —குறள்.

# 20. அன்பழைப்பு

வானத்திலே முழுமதி மேகத்தின் அணைப்பிலே சிக்காமல் விலகி ஓடியது. மேகம் ஆசை வெறி கொண்டு தாவியது நிலவை நோக்கி. நிலவு சிக்கிவிட்டது—எங்கும் இருள். மறைந்த நிலவு மீண்டும் முகிலை கிழித்து வெளியே பாய்ந்தது. இந்தக் காதல் காட்சியைப் பார்த்து விண் மீன்கள் கண்களை சிமிட்டி 'கலகல' வென சிரித்தன. மாதவியின் மனதிலே பற்பல கற்பனைகளை

பெருக்கியது அந்தக் காட்சி. அவளுடைய கண்களிலிருந்து வடிந்த கண்ணீர் திவலைகள் அவளுடைய வெண்ணிற ஆடையை நனைத்தன. அவள் துயரத்தின் விளிம்பிலே நின்றுகொண்டிருந்தாள்.

"அம்மா!" என்ற குரல் கேட்டு சுய உணர்வு பெற்றாள் மாதவி. அப்போதுதான் அவளுக்கு தான் கார் ஓட்டிக் கொண்டு போவதும், வேலைக்காரி அவளருகில் அமர்ந்திருப்பதும் நினைவிற்கு வந்தது. "அம்மா! இந்த இடந்தாம்மா" என்ற வேலைக்காரியின் குரல் கேட்டு காரை நிறுத்தினாள். "அதோ தெரிகிறதே ஓர் பாழடைந்த கோவில், அந்தக் கோவில்தான் என்று வேலைக்காரி கூறியதும் காரின் கதவை அடித்துச் சாத்திவிட்டு கோவிலை நோக்கி இரண்டடி எடுத்து வைத்தாள். "நானும் வரட்டா அம்மா?" என்று கேட்ட வேலைக்காரியிடம் "பரவாயில்லை பொன்னி, நீ இங்கேயே இரு! நான் இதோ வந்து விடுகிறேன்" என்று கோவிலை நோக்கி வேகமாக நடந்தாள்.

அது ஒரு பாழடைந்த 'கிருஷ்ணன் கோவில்' அதைச் சுற்றி 'சுதந்திரமாக' மண்டிக் கிடந்தன முட்செடிகள். அந்த கோவில் அறியாமை நிறைந்தவனின் உள்ளத்தைப் போல் இருண்டு கிடந்தது. இங்குமங்கும் பறந்தபடி ஒலி எழுப்பும் வௌவால்களில் ஒன்று மாதவியின் முகத்திற்கு நேரே பயங்கரமாக கத்தியபடி பறந்து சென்றது. மாதவியின் உடல் பயத்தால் நடுங்கியது. இடிந்து உருகுலைந்து போயிருந்த ஓர் சிலையின் மேல் அமர்ந்தபடி விழியை உருட்டி முழித்துக் கொண்டிருந்தது ஓர் ஆந்தை. எங்கோ தொலைவில் கோட்டான் ஒன்று அலறியது. இருளடைந்த அந்த கோவிலின் சில இடங்களில் நிலவொளி பாய்ந்து கொண்டிருந்தது. மாதவி நாலாபுறமும் தன் கண்ணோட்டத்தைச் செலுத்தினாள். அங்கே—அந்தக் கோவிலின் ஓர் மூலையில் பாம்பு ஒன்று மெள்ள நெளிந்து வளைந்து சாவகாசமாக போய்க் கொண்டிருந்தது. அதைப் பார்த்த மாதவி வாய்விட்டு அலறிவிட்டாள். அப்போது எங்கிருந்தோ அந்த பயங்கர இரவின் அமைதியைக் கிழித்துக் கொண்டு மெள்ள கேட்டது ஒரு பாட்டு.

மாதவி ஆவலுடன் இசை ஒலி வந்த இடம் நோக்கி ஓடினாள். அங்கே—அவள் கண்ட காட்சி! 'மினுக் மினுக்'கென்று எரியும் மெழுகுவர்த்தியின் அருகில் அமர்ந்தபடி ஒட்டிய கன்னங்களுடன் கிழிந்துபோன உடைகளை அணிந்தவாறு எலும்பும்

தோலுமாய் அமர்ந்திருந்த ஒருவன் வானத்திலே மிதந்து செல் லும் நிலவை நோக்கி பாடிக்கொண்டிருந்தான். மாதவி அவனைக் கண்டதும் "எழில்" என்று அலறிவிட்டாள். எழிலன் மெள்ளத் திரும்பினான். அங்கே கண்களில் நீர் மல்க நின்று கொண்டிருந்த மாதவியைக் கண்டு எழுந்து அவளிடம் வந்தான்.

"வா மாதவி" என்றான் எழில் அமைதியுடன். மாதவி துய ரத்துடன் அழுதாள். "மாதவி, ஏன் அழுகிறாய்? அழாதே. துன் பத்தைத் தாங்க முடியாதவர்கள்தான் அழுவார்கள். என்னைப் பார் நான் அழுது அனேக நாட்கள் ஆகிவிட்டன. நான் இனி அழப்போவதில்லை. மாதவி நீயும் அழாதே. மனதைத் தேற்றிக் கொள்" என்றான் ஒரு வரண்ட சிரிப்புடன். அவள் ஏக்கத்தின் எதிரொலி வீசும் அவனுடைய கண்களைப் பார்த்தபடியே நின்று கொண்டிருந்தாள்.

"மாதவி, நான் இங்கே இருப்பது உனக்கு எப்படித் தெரி யும்?" என்றான் எழில். "என் வேலைக்காரி கண்டு பிடித்து என் னிடம் கூறினாள்" என்றாள் மாதவி. மாதவி, நீ இங்கே வந்திருக் கக் கூடாது. நான் இனி என் ஆயுளிலேயே உன்னை சந்திப்ப தில்லை என்று சங்கல்பம் செய்து கொண்டிருந்தேன்" என்றான் வேதனையுடன். "எழில், என் மேல் உங்களுக்கு அவ்வளவு கோபமா?" என்றாள் பரிதாபத்துடன். "இல்லை மாதவி இல்லை, உன்னை சந்தித்து உன் மனதிற்கு வேதனையைத் தரக் கூடாதே என்ற காரணத்தால்......" என்றான் களங்கமற்ற மனதுடன். மாதவி நெடுமூச்செறிந்தாள்.

எழில் அவனருகே பூத்துக் கிடந்த ஒரு அழகான 'காட்டு மலரை' எடுத்து மாதவியிடம் நீட்டினான். அவள் "எழில்" என் றாள் ஏக்கத்துடன். "மன்னித்துக்கொள் மாதவி......... உனக்கு மலர் சூட்ட நான் யார்?" என்று மலரைத் தரையில் வீசினான் எழில். தரையில் விழுந்த மலரை ஏக்கத்துடன் நோக்கிய மாதவி திடுக்கிட்டாள். அங்கே—மலருக்கருகில் காலியான 'மது' சீசாக்கள் கிடந்தன. அவற்றிலிருந்து மதுவாடை வீசியது. "எழில்......" என்று அவனை நோக்கினாள். அவன் முகத்தைத் திருப்பிக்கொண் டான். மாதவி மீண்டும் "எழில்......" என்றாள். எழிலன் திரும் பினான். அவனுடைய கண்களில் கண்ணீர் துளிகள் துளிர்த்தன. "எழில் குடிக்கக்கூட கற்றுக் கொண்டீர்களா?" என்றாள் நடுங்

கும் குரலில். ''மாதவி, நான்......'' என்று ஏதோ சொல்ல வந்த எழிலின் நெஞ்சிலிருந்து பயங்கரமான இருமலொன்று வெளிப் பட்டு அவனை கவ்விக் குமுறியது. மாதவி அவனை அணைத்தபடி ''எழில் இது உங்கள் உயிரையே குடித்து விடுமே?'' என்ருள் கவலையுடன். ''மாதவி, இந்த மது இல்லாவிட்டால் மாளாத துயரம் என்ரே என்னை கொன்றிருக்கும்'' என்ருன் எழில். ''எழில் மதுவை மறந்து விடுங்கள்'' என்ருள் மாதவி கண்களில் நீர்மல்க. ''மாதவி, நான் இன்னும் சில நாளைக்கு வாழ வேண்டுமானுல் இந்த மது எனக்கு அவசியம் தேவை, தயவு செய்து என்னை தடுக்காதே'' என்ருன் இருமியபடி. ''எழில்! என்னுல் தானே உங்களுக்கு இந்த நிலை'' என்ருள் மாதவி. அவனுடைய முகத்தில் சோகமும் வேதனையும் கலந்த சிரிப்பொன்று மின்னியது.

''எழில் என்னை மன்னித்து விடுங்கள். நான் இனி உங்கள் மங்கிய வாழ்விற்கு ஒளியேற்றி வைக்க முடியாது. நான் விதவை- வாழும் ஆசையையே மனதாலும் நினைக்கக் கூடாத கைம்பெண்— எழில் உங்கள் மனதிலே மாருத இடத்தைப் பெற்றுவிட்ட என் உருவத்தை அழித்துவிட்டு உங்களுடைய மெய்க்காதலை உத்தமி ஒருவளிடம் ஒப்படைத்து விடுங்கள்.........''

''மாதவி! போதும், போதும்...... என்னை உன் சொல்லம்பு களால் தாக்காதே. மாதவி, எனக்கு வாழ்வென்று ஒன்று இருக்கு மானுல் அது உன்னுடன்தான். மாதவி என் உடலிலே கடைசி 'ஒரு துளி' இரத்தம் இருக்கும் வரை—என் உடலிலே இறுதி உயிர் ஊசலாடும் வரை என் உயிரின் உள்ளோடும் உணர்வே உன் என்னமாகவேதான் என் வாழ்வு அஸ்தமிக்கும்.''

''எழில்!''

''மாதவி''

''எழில்...... என் மேல் நீங்கள் கொண்ட காதல் உண்மை யானதென்ருல்...... இன்று முதல்......''

''சொல் மாதவி...... சொல்...... இன்று முதல்......''

''இந்த மதுவை மறந்துவிடுவதாகச் சத்தியம் செய்யுங்கள்''

''முடியாது மாதவி! முடியாது. இந்த மது இல்லாவிட்டால் நான் நெஞ்சம் வெடித்து மாண்டு விடுவேன்-நம் கடந்த கால வாழ்க்கை இன்பங்கள் என் இதயத்திலே தோன்றி என்னைக் கொல்லாமல் கொன்றுவிடும்.''

''இதுதான் உங்கள் முடிவா?''

''மாதவி, மறந்துவிடுகிறேன்......... நீ என்னை மணந்து கொள்கிருயா?''

''எழில்! சமூகம்......''

''சமூகம்! மாதவி...... அன்று ஆண்டவன் சாட்சியாக நீ கிழவன் ஒருவனுக்கு கன்னிகாதானம் செய்து கொடுக்கப்பட்டாயே. அப்போது இந்த கேடுகெட்ட சமூகம் எங்கே போயிற்று. ஒரு காலத்தில் 'கவிஞர் திலகம்' என்றெல்லாம் என்னை ஏற்றிப் போற்றிய இதே சமூகம் இன்று என் பெயரைக்கூட உச்சரிக்க மறந்துவிட்டது. மாதவி! இதோ பார் இந்த பாழடைந்த கோவிலில் பள்ளி கொண்டிருக்கும் பரமாத்மா இந்த ஊர் கோடீஸ்வரரின் கனவில் தோன்றி கோவிலை புதுப்பிக்கும்படி கட்டளையிட்டதாம். இனி இந்த இடிந்த கோவிலில் கூட எனக்கு இடமில்லை. நான் அமர்ந்திருக்கும் இதோ இந்த இடத்தில் அதோ உன் அருகில் கிடக்கும் 'கல்' கண்ணன் உருவில் வந்து உட்கார்ந்துவிடும். மாதவி...... பார்...... சமூகத்தின் தொண்டும்..... ஆண்டவனின் அன்பும் எந்தப் பக்கம் திரும்பி இருக்கிறதென்று

''எழில்! நீங்கள் இனி இங்கு இருக்க வேண்டாம் என்னுடன் வந்து விடுங்கள்.''

''உன் இருதயத்தின் கதவுகள் எனக்காகத் திறந்திருக்கின்றனவா?''

''எழில்! நான் பட்டுப்போன மரம்...... கடந்தவைகளை மறந்துவிடுங்கள். காதலியாக அல்ல நண்பர் என்ற முறையில் அழைக்கிறேன், வாருங்கள்.''

''மாதவி, நண்பனுக நான் வந்தால் உன் அமைதி அழிந்து விடும்.''

''நீங்கள் கண்டிப்பாக வரத்தான் வேண்டும்''

''மாதவி......''

''தயவு செய்து வாருங்கள்......''

''...............''

''புறப்படுங்கள் எழில்.''

மக்களே போல்வர் கயவ ரவரன்ன
வொப்பாரி யாங்கண் ட தில்—குறள்.

# 21. எங்கு சென்றுறே

'ஓ' வென்ற பேரிரைச்சலுடன் புகையைக் கக்கியபடி கிளம் பியது புகை வண்டி. மல்லிகா மோகனின் கைகளைப் பற்றியபடி இரண்டாம் வகுப்புப் பெட்டியில் உட்கார்ந்திருந்தாள். அவ ளுடைய கண்கள் வானத்திலே ஒளிவிடும் மணிவிளக்குகளை எண் ணிக் கொண்டிருந்தன.

"மல்லிகா......" என்று அவளுடைய தோளில் கையைப் போட்டான் மோகன். "என்ன?" என்று அவனைப் பார்த்து புன் னகை ஒன்றை உதிர்த்தாள் மல்லிகா. "வானத்து நட்சத்திரங் களை எண்ணுகிறாயா?" என்றான் அவன் குறும்பாக. "ஏன் எண்ண முடியாதா?" என்றாள் அவள். "முடியும்! ஏமாற்றுக் காரர்களின் மனதை எடைபோட முடிந்தால்" என்றான் மோகன்.

"என்ன சொல்லுகிறீர்கள்?" என்றாள் மல்லிகா திடுக்கிட்டு.

"உம்! உன் போன்ற களங்கமற்ற அழகிகள் மத்தியிலே தீய வர்களும் நடமாடுவார்கள் என்று சொல்கிறேன்."

"விளங்கவில்லையே!"

"அனுபவத்தில் தெரிந்து கொள்வாய்."

இருவரின் இடையிலும் அமைதி ஆட்சி செலுத்தியது சிறிது நேரம்.

"மல்லிகா......"

"உம்......"

"எனக்கொரு சந்தேகம்"

"என்ன?"

"வானத்தில் மிதப்பது நிலவா; என் அருகில் இருப்பது நிலவா?"

"உம்...... நான் என்ன அவ்வளவு அழகாகவா இருக்கிறேன்."

"மல்லிகா, திலோர்த்தமை, ஊர்வசி, மேனகை, அரம்பை, என்றெல்லாம் கதை அளப்பார்களே புராண தாசர்கள் அவர்களெல்லாம் உன் அழகைப் பார்க்காத அப்பாவிகள்."

"மோகன்......"

"மல்லிகா......"

"உம்......"

அவன் குனிந்து அவளுடைய கொவ்வை இதழ்களை கவ்விஞன். அவள் அவனிடம் தன்னை ஒப்படைத்தாள். அவன் அணைத்தான்—அவள் அடங்கிஞள். அவன் முத்தமிட குனிந்தான்—அவள் அவனை முந்திஞள். ஓடும் அந்த இரயில் அவர்களுக்குப் பள்ளியறையாக மாறியது—அவள் இளங்கோவிடம் இல்லாத இன்பத்தை—கண்ணனிடம் காணுத கனிவை, மோகனிடம கண்டாள். துன்பத்தை மறந்தாள். இன்பத்தை அடைந்தாள். நிம்மதியுடன் கண்ணை மூடிஞள்.

மல்லிகா தூக்கம் கலைந்து எழுந்தாள். அப்போது கிழக்கே செங்கதிரோன் உதயமாகிக் கொண்டிருந்தான். புகைவண்டி புயல் வேகத்தில் போய்க்கொண்டிருந்தது. மல்லிகா திரும்பி மோகனை நோக்கிஞள். அங்கே—அவளுடைய புதுக்காதலனை காணவில்லை. திடுக்கிட்ட மல்லிகா எழுந்து நின்று அவர்கள் பெட்டியை வைத்த இடத்தை பார்வையிட்டாள். அந்த இடத்தில் பெட்டியைக் காணவில்லை. பதறிப்போய் மல்லிகா தன் மேல் கண்ணேட்டத்தைச் செலுத்திஞள். அங்கே அவள் அணிந்திருந்த நகைகளைக் காணவில்லை. மல்லிகாவின் தலை வெடித்துவிடும் போல் இருந்தது. இடிந்துபோய் உட்கார்ந்து விட்டாள். அவளுடைய கண்கள் நீரை உகுத்தன. வேதனை தாளாமல் விம்மி விம்மி அழுதாள். ஆனல் அவள் அமர்ந்திருந்த இரயில் மட்டும் எப்போதும் போல் வேகமாகவே ஓடியது.

மல்லிகா அழுதாள்—புலம்பிஞள்—பித்தம் பிடித்தவளைப் போல் பிதற்றிஞள். அவளுக்கு அந்த ஓடும் இரயிலில் தேறுதல் கூற யாருமே இல்லை. பாவம் அவள் என்ன செய்வாள். இந்த உலகம் போலி மனிதர்கள் நிறைந்தது என்பது அவளுக்கு எப்படித்

தெரியும். அவளுடைய துயரத்தைக் காண சகியாமல்தானே என்னவோ, அந்தப் புகைவண்டி பெருமூச்சுவிட்டபடி ஒரு நிலை யத்தில் நின்றது.

அவள் அமர்ந்திருந்த பெட்டியில் ஏறினாள் 'ஒரு வடை கொண்டை' வடிவழகி. அவள் ஒல்லியாகவும் நெட்டையாகவும் இருந்தாள். அவளுடைய மார்பகங்களை மறைத்திருந்த சிறிய 'ஜம்பர் பாடி' வெளியில் தெரியும் வகையில் 'அழகான' மெல்லிய ஜாக்கட் அணிந்திருந்தாள். நடக்கும்போது நெளியும் அவளது இடை–அதன் மேல் தவழ்ந்து கொண்டிருந்த அந்த உடை–அவ் வுடையிலிருந்து பறவிய 'சென்ட்டின்' நெடி–இவையெல்லாம் அவளை ஒரு பெரிய இடத்துப் பெண்'ணாக தோன்றச் செய்தது. தன் கையிலிருந்த டம்பப் பையை திறந்து அதிலிருந்த குட்டிக் குரு' பவுடரை முகத்தில் ஒற்றியபடி மல்லிகாவை ஒரு தினுசாகப் பார்த்தாள்.

அந்த புதிய சிங்காரிக்கும் மல்லிகாவிற்கும் வெகு விரைவி லேயே பரீட்சையமாகிவிட்டது. தன்னுடைய அவல நிலையை அவளிடம் எடுத்துச் சொல்லி கண்ணீர் வடித்தாள் மல்லிகா. அவளை வெகுவாக தேற்ற முயன்றாள் பிரேமா. ஆம்! அதுதான் அவள் பெயர். என்னதான் தேற்றியும் அவளால் மல்லிகாவின் அழுகையை நிறுத்த முடியவில்லை.

புகை வண்டியும் அவளுடைய அழுகையைக் கண்டு மனம் தாளாமல் பெருமூச்சுவிட்டபடி ஒரு நிலையத்தில் நின்றது. பிரேமா, மல்லிகாவை அழைத்துக் கொண்டு வண்டியைவிட்டு இறங்கினாள். மல்லிகா மகுடிக்கு மயங்கிய நாகத்தைப்போல் அவள் பின் சென்றாள். அங்கு இரயில் நிலையத்தில் இருந்த பலர் பிரேமாவைப் பார்த்து சிரித்தனர். "ஹலோ பிரேமா......" என்று அழைத்தபடி அங்கே தோன்றினான் ஒரு 'கூலிங்கிளாஸ்' மைனர். பிரேமா அவனுடன் சிரித்து பேசியபடி நடந்தாள். மல் லிகா அவர்கள் பின்னால் மவுனமாக நடந்து கொண்டிருந்தாள். அவர்களுக்குப் பின்னால் சிலர் கேலியாகவும் கிண்டலாகவும் பேசிக்கொண்டிருந்தது மல்லிகாவின் காதுகளில் விழுந்தது. அவர் களுடைய பேச்சில் 'பிரேமா, பிரேமா' என்ற பெயர் அடிபடு வதை கேட்டு அவள் திகைப்பும் வியப்பும் கொண்டாள்.

புணர்ச்சி பழகுதல் வேண்டா வுணர்ச்சிதா
னட்பாங் கிழமை தரும் —குறள்

# 22. மதுவும் மங்கையும்

சன்னல் கம்பிகளைப் பிடித்தபடி கீழ் வானத்திலே கடலை நோக்கி சரிந்து கொண்டிருந்த ஞாயிறைப் பார்த்தபடி நின்று கொண்டிருந்தான் எழிலன். அவன் கற்பனை உள்ளம் ஆழியின் அலைகளைப் போல் 'ஆடி ஆடி' ஆர்ப்பரித்தது. கடந்த கால சம்ப வங்கள் தோன்றித் தோன்றி மறைந்தன அவன் மனதில். அவன் உலகையே மறந்து சிந்தனைக் கடலில் புதைந்து கொண்டிருந் தான்.

''எழில்!'' என்ற குரல் கேட்டு திரும்பினான். அங்கே மாதவி கையில் பாலுடன் நின்று கொண்டிருந்தாள். எழில் அவளைப் பார்த்து மெல்ல சிரித்தபடி பாலை வாங்கிப் பருகினான். அப்போது வாசலில் இருந்து ''அம்மா!'' என்ற குரல் கேட்டு மாதவி வெளியே சென்றாள். எழிலும் அவள் பின்னால் சென்றான். அங்கே பால்காரி நின்று கொண்டிருந்தாள். எழில் அவளுடைய முகத் தைப் பார்த்தான். மறுகணம் அவன் முகம் விகாரமாக மாறியது. அவள்—அந்த பால்காரி பார்ப்பதற்கு அருவறுப்பாக இருந்தாள். பூ விழுந்த கண்கள்—தீயால் பொசுக்கப்பட்ட கன்னம்—கோரைப் பற்கள்—அவள் ஒரு பயங்கரப் பிறவி. எழில் 'அய்யோ! பெண்ணா இவள்' என்று கண்களை மூடிக்கொண்டான். பால்காரி போய் விட்டாள்.

எழில் கண்களைத் திறந்தான். அவன் எதிரே மாதவி அடுக் களையிலிருந்து வந்து கொண்டிருந்தாள். எழில் அவளையே பார்த் துக்கொண்டிருந்தான். அவள்—வெள்ளை ஆடை உடுத்தியிருந் தாள். அவளுடைய சுருண்ட கேசங்கள் மலரும் மணமும் இன்றி முடியப்பட்டிருந்தன—வளைந்த புருவங்கள்—நடனமாடும் விழிகள்—கொவ்வை இதழ்கள்— முத்தாரப் பற்கள்—இவையெல்லாம் எழி லனை பித்தனாக்கின. ''மாதவி நீ 'அழகு' தெய்வத்திற்கு அழியாத துரோகம் செய்கிறாய். உன் போன்ற அழகிகள் வாளாவிருந்தால்

பால்காரி போன்ற குரூபிகள் இன்னும் பெருகிக்கொண்டே போவார்கள். மாதவி! நீ வாழ ஆசைப்படு அழகுச் சிலைகளை அவனிக்கு அளிக்கவாவது நீ வாழ ஆசைப்படு'' என்ருன் எழில் உணர்ச்சி வசப்பட்டு.

''எழில்! நான் விதவை என்பதை நீங்கள் மறந்துவிட்டீர்களா? என் கடந்த கால காதல் சம்பவங்களெல்லாம் வெறும் ஊமை கண்ட கனவு. இனி என் மனதில் வாழ்வதைப் பற்றி நான் நினைப்பதே பாவம்.''

''பாவம்! மாதவி, விதவையாகிவிட்ட எல்லோருமே வாழ முடியாதவர்களாகி வேதனைப்படும் போது; மனைவியை பிரிந்த ஆடவன் மட்டும் மறுமணம் செய்து கொள்ளலாமா? கைம்பெண்கள் காதலை மறந்து விடவேண்டும்—இன்ப சுகத்தை உதறித் தள்ள வேண்டும்—ஆடம்பரத்தை அகற்ற வேண்டும்—வெள்ளை ஆடை உடுத்த வேண்டும், வேதனைப்பட்டு சாக வேண்டும். இது தானே மாதவி இன்றைய விதவைகளின் நிலை. மாதவி! சற்று நினைத்துப் பார். பெண்களுக்கு மட்டும் 'விதவை'ச் சட்டத்தை சூட்டும் கேடுகெட்ட சமூகம் ஆண்களுக்கு மட்டும் ஏன் அந்தப் பட்டத்தை சூட்ட முன் வரவில்லை? ஆணுக்கொரு நீதியும்—பெண்ணுக்கொரு நீதியும் ஆண்டவன் படைப்பு என்று சொல்லக்கூடிய இந்த அவனி மக்களுக்கு ஏன்? ஏன் மாதவி, ஏன்—மாதவி, சற்று உன் நெஞ்சில் கைவைத்து நேர்மையின் மேல் ஆணையிட்டுச் சொல். நீ இந்த கைமைக் கோலத்தை உண்மையிலேயே விரும்புகிருயா அல்லது சமூகத்திற்குப் பயந்து ஏற்றுக் கொள்கிருயா? சொல் மாதவி, சொல். மாதவி அன்று நீ வலுக்கட்டாயமாக ஒரு வயோதிகனுக்கு தாரைவார்க்கப்பட்டபோது ஏன் என்று கேட்காத கேடுகெட்ட சமுதாயம் இன்று நீ விதவையாகி விட்டபோது மட்டும் சொந்தங் கொண்டாடி கட்டுக் காவலை உனக்கு சட்டமாக தீட்ட முன் வருகிறது. மாதவி! நீ சமூக சட்டத்திற்கு பயந்து உன் இளமையையும் வாழ்வையும் பலி கொடுப்பது வருங்கால புதிய சமுதாயத்திற்கு நீ 'சமாதி' கட்டுவதற்கு ஒப்பாகும்.''

''எழில்! போதும், போதும்! நான் வாழ விரும்புவது உண்மையாக இருக்கலாம்; ஆனல் அந்த அற்ப ஆசைக்கு அடிமையாகி மாருத அவச் சொல்லுக்கு ஆளாக நான் விரும்பவில்லை.''

''மாதவி பழிச் சொல்லுக்காகப் பயந்து உன் வாழ்வை சுடு காடாக்கிக் கொள்கிருய். நீயும் நானும் வாழ முயன்ருல், வம் பளக்கும் இந்த வகை கெட்ட மன்பதை 'பெரிய இடத்திலே' நடக்கும் பொல்லாத செயல்களை கண்டிக்க சற்றேனும் முன் வரு கிறதா? மாதவி நீ வாழ்ந்து முடிந்துவிட்டது என்று வெள் ளாடை பூண்டு கைமை நோன்பு இருக்கத் துணிந்துவிட்டாயே அதே சமயம் உன் முடிவிற்கு வர முடியாத வாழ விரும்பிய 'சமூக சட்டங்களுக்கு' பயந்த விதவைப் பெண்கள் 'இன்ப அரிப் பிற்கு' அடிமையாகி தவறு செய்துவிட்டு தாங்கள் பெற்றெடுத்த செல்வங்களை 'அவமானச் சின்னங்களை' ஆற்றிலோ குளத்திலோ எறிந்துவிட்டு தங்கள் வாழ்வை 'ஒரு துளி' விஷத்தினிடம் ஒப் படைத்துவிடும் எத்தனையோ அபலைகளின் சோக வரலாற்றை அன்ருடம் 'கண்ணீர் துளிகளின்' எழுத்து மூலம் தெரிந்திருப் பாயே. நம் புரட்சிக் கவிஞர்கூட 'பாடாத தேனீக்கள்–உலவாத தென்றல்–பசியா நல்வயிறு கண்டதுண்டோ' என்று கூறு கிருரே அது பொய்யா? எத்தனை விதவைகள் தங்களுடைய கைமைக் கோலத்தை மனதார விரும்புகிருர்கள் என்று விரல் விட்டு கூற முடியுமா உன்ருல்.''

''எழில்! தயவு செய்து இனி இதுபோல் பேசாதீர்கள். உங் கள் சொற்கள் உயிர் பெற்று எழுந்தால்......... அய்யோ நினைக் கவே பயங்கரமாக இருக்கிறது.''

''மாதவி......''

''என் முடிவை மாற்ற முடியாது'' என்று கூறியவாறு உள்ளே போய் விட்டாள் மாதவி. எழில் வேதனைப் பிடியில் சிக்கி வெந்து கொண்டிருந்தான். அவனுடைய மனம் அமைதி இழந்து தவித்தது. அவன் மேஜை டிராயரைத் திறந்து 'மது' வைக் கையில் எடுத்தான். மதுவைப் பருகிய பின் அவன் மனம் அமைதியைப் பெற்றது. 'மங்கை'யின் பிரிவை மறக்க 'மது' தான் அவனுக்கு ஒரு ஒப்பற்ற ஔடதமாகத் தோன்றியது.

முகத்தி னினிய நகாசு வகத்தின்னு
வஞ்சரை யஞ்சப் படும் —குறள்.

# 23. புது வாழ்வு

பிரேமா மல்லிகாவை ஒரு அலங்கரித்த வீட்டினுள் அழைத்துச் சென்றாள். வீடு ஆடம்பரமாக இருந்தது. மல்லிகாவை ஒரு அறைக்கு அழைத்துச் சென்ற பிரேமா "மல்லிகா! இதோ, இது தான் இனி உன் அறை—இதை உன் வீடு போல் நினைத்துக் கொள்" என்று சிரித்தபடி கூறிவிட்டு அவளை அங்கே விட்டு விட்டு தன்னுடைய அறைக்குச் சென்றாள்.

மல்லிகா அந்த அறையை சுற்றி தன்னுடைய கண்ணோட்டத்தைச் செலுத்தினாள். அங்கே இரண்டு சோபாக்கள்—ஒரு வட்டவடிவ மேஜை—அலங்கரித்த கட்டில்—ஒரு பெரிய நிலைக் கண்ணாடி—அதனருகே விதவிதமான வாசனைப் பொருள்கள்—பவுடர் டப்பாக்கள்—இன்னும் சில சில்லறைச் சாமான்களும் இருந்தன. சுவற்றில் பல உலக அழகிகளின் 'நிர்வாண' படங்கள் மாட்டப்பட்டிருந்தன. அவற்றின் மத்தியில் பெரிதாக ஒரு படம்! இரம்மியமான பூஞ்சோலை—அதைக் கிழித்துச் செல்லும் நீரோடை—அதில் நீராடும் நிர்வாண அழகிகள்—அவர்களின் அழகை அள்ளிப் பருகியபடி அவர்தம் ஆடைகளை மரக்கிளையில் முடிந்துவிட்டு குழல் ஊதும் 'கண்ணன்.' ஆடை வேண்டுமென அணங்குகள் அல்குல் தெரிய அந்த பரமாத்மாவை தொழுது நிற்க, அவரோ அலட்சியமாக சிரிக்க......! இந்தக் காட்சியை சித்திரிக்கும் அந்த ஓவியம் மல்லிகாவின் மனதிலே பள்ளிச் சிறுவன் கண்ணனை கொண்டு வந்து நிறுத்தியது. அந்த சின்னஞ்சிறு இளைஞனை நினைத்து விம்மி விம்மி அழுதாள்.

அன்று இரவு நிம்மதியற்ற மனதுடன் மஞ்சத்தில் படுத்த மல்லிகாவின் மனக்கண் முன் இளங்கோவும்—கண்ணனும் வந்து வந்து போனார்கள். எப்படியோ ஓரளவு துன்பத்தை மறந்து தூக்கத்தில் மூழ்கிய அவளுடைய கன்னத்தை யாரோ வருடவே

துள்ளி எழுந்தாள் மல்லிகா. அங்கே...... புகை வண்டி நிலையத்தில் பிரேமாவை சந்தித்த அதே இளைஞன் நின்று கொண்டிருந்தான். திடுக்கிட்ட மல்லிகா "ஆ! நீங்களா?" என்றாள்.

"ஆம் நான்தான்! சந்திரன்" என்றான் சிரித்தபடி.

"தனித்திருக்கும் ஒரு பெண்ணிடம் தகாத முறையில் நடந்து கொள்வதுதான் உங்கள் பண்பா?"

"மல்லிகா, இந்த இரவை வீணாக்காதே......"

"சீ! மானங்கெட்டவனே போ வெளியே."

"இல்லாவிட்டால்.........?"

"அடுத்த அறையில் இருக்கும் பிரேமாவை கூவி அழைப்பேன்."

"அய்யோ, பேதைப் பெண்ணே. எனக்குக் கதவைத் திறந்து விட்டவளே அந்த பிரேமாதானே" என்றான் கிண்டலாக.

"என்ன?" என்று அலறினாள் மல்லிகா. அவன் சிரித்தான். அவள் அசைவற்று நின்றாள். பாவம்...... அவளுக்கு எப்படித் தெரியும் 'தாசி பிரேமாவின்' வினோத 'பிசினஸ்.'

"மல்லிகா" என்று அவளை கட்டி அணைத்தான் அந்த காம வெறியன். அவள் அவனை தடுக்கவில்லை. அவன் அவளுடைய இதழ்களைச் சுவைத்தான். அவளால் ஒன்றுமே செய்ய முடியவில்லை. பிரமை பிடித்தவளைப் போல் அவனுடைய செயல் ஒவ்வொன்றையும் அனுமதித்தவாறு வாளாவிருந்தாள். அவன் 'படுக்கை விளக்கை' அணைத்துவிட்டு அவளை மஞ்சத்தில் தள்ளினான். மாமிசத் துண்டைக் கடித்துக் குதறும் வெறி நாயைப் போல்...... அந்த மனித மிருகம் அவளிடம் நடந்து கொண்டது.

மறுநாள் காலை படுக்கையில் மயங்கிக் கிடந்த மல்லிகாவை எழுப்பிய வேலைக்காரி 'காபியை' அவளருகே வைத்துவிட்டுப் போனாள். மல்லிகாவால் உடனே எழுந்து உட்கார முடியவில்லை. யாரோ அவளை படுக்கையுடன் சேர்த்து கட்டிப்போட்டிருப்பது போல் அவளுக்குத் தோன்றியது. மெல்ல சிரமத்துடன் எழுந்து உட்கார்ந்த மல்லிகாவிற்கு இந்த உலகமே வெறுத்துவிட்டது. இனி இவ்வுலகில் வாழக் கூடாது என முடிவு செய்தாள். தற்

கொலே! ஆம். இனி தற்கொலேதான் அவளுக்கேற்ற தண்டனே. மல்லிகா மன உறுதியுடன் எழுந்து நின்ருள்...... அதே சமயம் அவள் மனக்கண்முன் இளங்கோ வந்து நின்ருன். தான் தன் கணவனுக்கு செய்த துரோகத்தை நினேத்து தேம்பித் தேம்பி அழுத மல்லிகா எப்படியாவது தன் கணவனேத் தேடி அவனுடைய பாதங்களே கண்ணீரால் கழுவி அவனிடம் மன்னிப்பு பெறவிரும்பிஞள். அவள் வாழ்ந்துவிட்டாள். வாழ்விலும் கேடுகெட்ட வாழ்வு. இனி இளங்கோவைச் சந்தித்து தன் தவறுக்காக மன்னிப்புப் பெறும் வரை அவள் வாழ வேண்டும்—எப்படியாவது வாழ்ந்தாக வேண்டும். அதே வாழ்வு...... விபச்சார வாழ்வு மீண்டும் துவங்கியது.

அன்பும் அறனும் உடைத்தாயின் இல்வாழ்க்கை
பண்பும் பயனு மது —குறள்.

# 24. உயிரோவியம்

எழிலனின் உடலே காமனின் கணேகள் துளேத்தன. அவன் உள்ளம் காதல் தியால் வெந்து கருகியது. மாதவியின் எண்ணமாகவே ஏங்கிக் கொண்டிருந்தான். துயரம் தீர்க்க 'மது'வைக் குடித்தான். ஆனுல் அந்த மதுவோ அவனுடைய காமவெறியை தூண்டியதே தவிர அமைதி தரவில்லே. எழிலன் எழுந்து சென்ருன் மாதவியின் அறையைத் தேடி. அங்கே மாதவி படுக்கையில் படுத்துக் கிடந்தாள். அவளுடைய முகம் மதியைப் பழிக்கும் விதத்திலே ஒளி வீசியது, மார்பகங்களே மறைத்திருந்த புடவை விலகியதின் காரணமாக அவளுடைய கொங்கைகள் கம்பனின் வர்ணனேக் கொப்ப 'கலச'மாகவே காட்சியளித்தன.

அவனுடைய உடலில் குருதி கொதித்து காம அலேகளாக உள்ளத்தில் மோதின. எழில் தன்னே மறந்து அவளே நெருங்கினுன். அப்போது வெளியே வானம் கருத்தது. முகில்கள் முழங்கின—மின்னல் வெட்டி ஆர்ப்பாட்டம் செய்தது—சூருவளி சுழன்

றடித்தது—மழை, ஒரே அடை மழை. எழில் வீட்டின் வெளியே நடக்கும் மழையின் முழக்கங்களுக்கு அஞ்சவில்லை ஏனென்றால் அவனுடைய உள்ளம் இப்போது குமுறும் எரிமலையாக மாறி இருந்தது. உணர்ச்சி கடுமையாகி எழில் குனிந்து தன்னுடைய நடுங்கும் கரங்களால் அவளுடைய அனிச்ச மலரன்ன எழில் முகத்தை வருடினான்-அவனுடைய உடலில் உணர்ச்சி அலைகள் மின்சாரம்போல் பாய்ந்தன. அப்போது பயங்கர இடி முழக்கம் கேட்டு துடித்து எழுந்தாள் மாதவி. எழில் திடுக்கிட்டான். அவள் மாறி மாறி அவனுடைய கன்னங்களில் அறைந்தாள். எழில் சுய உணர்வு பெற்று "மாதவி, மாதவி...... என்னை மன்னித்து விடு" என்று அலறினான்.

"எழில், தாங்கள் இப்படி நடந்து கொள்வீர்கள் என்று நான் எதிர்பார்க்கவே இல்லை" என்றாள் படபடப்புடன். "மாதவி, உணர்ச்சி வசப்பட்டு என் பகுத்தறிவை இழந்துவிட்டேன்" என்றான் கண்களில் நீரோடிய. "எழில், இனியும் நீங்கள் என்னுடன் இருந்தால் உணர்ச்சிக்கடிமையாகி இமயம் நிகர் தவறுகள் செய்யத் துணிந்து விடுவீர்கள். தயவு செய்து என்னைவிட்டுப் போய் விடுங்கள்" என்றாள் அழுதவாறு. "மாதவி! என்னையா போகச் சொல்லுகிறாய்?" என்றான் எழில் தடுமாறியபடி. "ஆம் உங்களைத் தான் போகச் சொல்கிறேன். எழில் என்னை மன்னித்து விடுங்கள். நீங்கள் இங்கே இருந்தால் என் உறுதி குலைவது நிச்சயம். தயவு செய்து போய்விடுங்கள்" என்று அவனுடைய கால்களில் விழுந்து மன்றாடினாள்.

"மாதவி, உண்மையாகவா என்னைப் போகச் சொல்கிறாய்?"

"ஆம்"

"போகிறேன் மாதவி! போகிறேன், இந்த உலகைவிட்டே போய் விடுகிறேன். இந்த உலகில் நான் யாருக்காக வாழ ஆசைப்பட்டேனோ, எந்த ஒருவளுக்காக கொதித்து குமுறும் சோக உள்ளத்தை தாங்கிக் கொண்டு இவ்வளவு நாள் வாழ்ந்தேனோ அதே என் மாதவி என்னை வெளியில் துரத்தத் துணிந்த பின் இனி நான் ஏன் வாழ வேண்டும்."

"எழில்! எழில்! என்னை மன்னித்து விடுங்கள். என்னை மன்னித்து விடுங்கள்."

"நான் யார் மாதவி உன்னை மன்னிக்க?"

"எழில், என் மீது கோபமா?"

"இல்லை மாதவி இல்லை. நான் போய் வருகிறேன்."

"இல்லை எழில், நீங்கள் போக வேண்டாம். அடங்காத ஆசையை அணைபோட்டுத் தடுத்துக் கொண்டு என்னுடனேயே இருங்கள்."

"வேண்டாம் மாதவி, என்னைத் தடுக்காதே."

"எழில்."

"மாதவி! என் மேல் உனக்கு உண்மையான அன்பு இருக்குமானால்......... எனக்கொரு உதவி செய்வாயா? என்னுடைய கடைசி ஆசையை நிறைவேற்றுவாயா மாதவி?"

"எழில், என்ன செய்ய வேண்டும்......?"

"மாதவி...... நீ......... எனக்கு...... எனக்கு......"

"சொல்லுங்கள் எழில்...... எது வேண்டுமானாலும் செய்கிறேன்."

"மாதவி! அன்று, உனக்கும் எனக்கும் உறவு நேர்ந்த அந்த இரவில் நான் உன்னை சந்தித்தேனே அதே போல், இன்று நீ உன் கண்களுக்கு அஞ்சனம் தீட்டி வளைந்த புருவங்களுக்கு மையிட்டு சுருண்டு நீண்ட கூந்தலுக்கு மலர்சூட்டி புன்னகைப் பொழிவு சிந்தும் உன் தன் உடலுக்கு பொன்னகைகள் பூட்டி கொடி அன்ன உன் மேனிக்கு பட்டாடை உடுத்தி—எனக்கு உன் அழகுத் திரு உருவத்தைக் காட்டுவாயா மாதவி. உன்னை இந்தக் கைம்மைக் கோலத்துடன் என் கடைசி காலத்திலும் பார்க்க நான் விரும்பவில்லை. இந்த அமங்கல கோலத்தில் உன்னை பார்த்தபடி சாக நான் விரும்பவில்லை........."

"அய்யோ! எழில் போதும், வேறு ஒன்றும் சொல்லாதீர்கள். நான் உங்களுடைய ஆசையை பூர்த்தி செய்கிறேன்" என்று உள்ளே ஓடினாள். எழில் சாளரத்தின் வழியே வெளியில் நோக்கினான். அங்கே—நிலையில் எதும் மாற்றமில்லை—சூருவளி சுழன்றடிப்பதை நிறுத்தவில்லை-மேகத்தின் முழக்கம் நன்றாகக் கேட்டது அவன் செவிகளுக்கு. எழில் தன்னை மறந்திருந்தான். அப்போது, "எழில்" என்ற குரல் கேட்டு திரும்பினான். அங்கே—

அலங்கார த் திரு உருவாய்–வானகத்தின் வார்ப்படமாய்--அழகின் இருப்பிடமாய் நின்று கொண்டிருந்தாள் மாதவி. "மாதவி" என்று மெல்ல முணகினன் எழில்.

"எழில்" என்று அவனருகே வந்த மாதவி "துயரம் தரும் சமயங்களில் மது கேட்பீர்களே இப்போது வேண்டுமா?" என்ருள். எழில் 'மது' பாட்டிலை கையில் எடுத்து வெறி கொண்டவனைப் போல் அதை வெளியே தூக்கி வீசினன். பாட்டில் வெளியில் விழுந்து நொறுங்கியது. மாதவி "எழில்" என்று கத்தினள். "மாதவி பயப்படாதே எனக்குப் பித்தம் பிடித்துவிடவில்லை. இப்போதுதான் அறிவுக் கண்கள் திறந்திருக்கின்றன. இனி எனக்கு இந்த மது தேவை இல்லை. நான் இனி அதிக நாள் வாழப்போவதும் இல்லை. மாதவி நீ மட்டும் எப்படியாவது மீண்டும் வாழ முயற்சி செய். உன் அழகு அழிந்து விடக்கூடாது. உன் மனதிற்கிசைந்த ஒருவனை மணந்து கொள்."

"அய்யோ, அப்படியெல்லாம் பேசாதீர்கள். எழில் உங்களுடைய சோகம் கப்பிய உள்ளத்திற்கு அமைதி தரும் பாட்டு ஒன்று பாடட்டுமா?"

"பாடு மாதவி, பாடு. 'துன்பம் நேர்கையில் இன்பம் தரும்' புரட்சிக் கவிஞரின் பாட்டைப்பாடு" என்ருன் எழில் கண்களில் நீர் மல்க. மாதவி மூலையில் தூசி படிந்து கிடந்த வீணையை எடுத்து துடைத்துவிட்டு சுருதி சேர்த்து மீட்டினள். தென்றலென தவழ்ந்தது அவளுடைய பாட்டு. நரம்புகளை எல்லாம் சுண்டி இழுத்தது அவளுடைய வீணையின் நாதம். எழில் அவளையே பார்த்துக் கொண்டிருந்தான். அவள் பாடும் ஒவ்வொரு வரிகளும் அவனுடைய உள்ளத்திலே உணர்ச்சிகளைப் பெருக்கி அவனைப் பித்தனுக்கின.

மாதவி தன்னை மறந்து வீணையை மீட்டிப் பாடினள். பாட்டு முடிந்ததும் அவளுடைய தலை வீணையின் மேல் சாய்ந்தது. அவளுடைய கண்கள் 'பொல பொல'வென கண்ணீரை உகுத்தன. அவள் விம்மி விம்மி அழுதாள். அப்போது வீணையின் தந்தி ஒன்று 'டணர்' என்று அறுந்து ஓசை எழுப்பியது. மாதவி திடுக்கிட்டு நிமிர்ந்தாள். அங்கே–எழிலனைக் காணவில்லை. மாதவி திடுக்கிட்டு எழுந்தாள். வெளியே சூருவளி.

மாதவி "எழில், எழில்" என்று கத்தியபடி எங்கும் தேடினாள் ஆனால் அவன் அங்கே எங்குமே இல்லை. மாதவி திறந்து கிடக்கும் கதவருகில் வந்து நின்று வெளியே நோக்கினாள். அங்கே—அப்போது வெட்டிய மின்னலில் எழிலன் நடந்து செல்வது மங்கலாகத் தெரிந்தது அவள் கண்களுக்கு. "எழில், எழில்" என்று அவள் அவனைத் தொடர்ந்து ஓடினாள். அவன்—அடிக்கும் புயல் காற்றிற்கும்—பெய்யும் மழைக்கும்—இடியின் முழக்கங்களுக்கும்—கண்ணைப் பறிக்கும் மின்னலின் வீச்சுகளுக்கும் கொஞ்சமும் பயப்படாமல் போய்க்கொண்டிருந்தான். "எழில், எழில்...... நில்லுங்கள்" என்று அவனைப் பிடித்து நிறுத்தினாள் மாதவி.

"ஏன் மாதவி என்னைத் தடுக்கிறாய்......?,,

"எழில்! எங்கே போகிறீர்கள் இந்த மழையில்?'

"அது எனக்கே தெரியாது மாதவி."

"அத்தான்......"

"மாதவி......!"

"நான் வாழ முடிவு செய்துவிட்டேன் அத்தான்"

"மாதவி......!!"

"இந்த கண்மூடி உலகிற்காக என் வாழ்நாட்களை நான் வீணாக்கிக் கொள்ளப்போவதில்லை."

"மாதவி! நீதானா பேசுகிறாய்?"

"ஆம், புதிய மாதவி பேசுகிறேன்."

"மாதவி......... என் உயிரோவியமே......"

"அத்தான்......"

"மாதவி......"

எழில் பொங்கி வரும் பூரிப்புடன் அவளுடைய முகத்தை நிமிர்த்தி துடிக்கும் அவளது இதழ்களில் முத்த மழை பெய்தான். மாதவி தன்னை மறந்து அவனை இறுகத் தழுவினாள். அப்போது வெட்டிய மின்னலின் வீச்சிலே அந்த அன்புக் காதலர்கள் வீட்டை நோக்கி கைகோர்த்துக் கொண்டு நடந்து செல்வது நன்றாகத் தெரிந்தது.

மயிர்நீப் பின்வாழாக் கவரிமா வன்ன
ருயிர்நீப்பர் மானம் வரின் —குறள்.

# 25. மல்லிகா

"மல்லிகா...... மறுக்காதே இந்த ஒருவனை மட்டும் நீ கண்டிப்பாக திருப்தி செய்யத்தான் வேண்டும்......"

"முடியாது...... என்னை என்னவென்று நினைத்துக்கொண்டிருக்கிறாய்? நான் இயந்திரமல்ல......"

"சிறு குழந்தையைப் போல் அடம் பிடிக்காதே......"

"என்னால் இனி முடியாது......"

"மல்லிகா! போலீஸ் ஆபீசரிடம் நாம் பகைத்துக் கொள்ளக் கூடாது. இந்த ஒருவனை மட்டும் எப்படியாவது சரிகட்டி அனுப்பிவிடு."

"..............."

மல்லிகாவால் அதற்கு மேல் பிரேமாவிடம் எதிர்த்து பேச முடியவில்லை. இவன் அன்றைய கணக்கின்படி இருபத்தி எட்டாவது மிருகம்......... பலரை மதுவைக் கொடுத்து ஏமாற்றி அனுப்பிவிட்டாள். சிலரை சிரித்துப் பேசி நாளைக்கு என்று நாள் குறித்து அனுப்பிவிட்டாள். இன்னும் சிலரை அவளுடைய எந்த சாகசமும் பலிக்காததால் அவர்கள் விருப்பப்படியே படுக்கையறை பாவையாக மாறி போக்குக் காட்டி அனுப்பிவிட்டாள். இனி அவளால் சமாளிக்க முடியாது என்ற நிலை ஏற்பட்ட இந்த வேளையில் மற்றும் ஒருவன்......?

"அல்லோ......... கமான் மை சுவீட் ஆர்ட்" என்று வாய் குளர நடை தளர கண்கள் சிவக்க பத்துமாத பச்சிளங் குழந்தையைப் போல் நடைபோட்டு அங்கு வந்தான் ஒரு 'உயர்தர' போலீஸ் ஆபீஸர்.

"அல்லோ......" என்று தன் கையில் தயாராக வைத்திருந்த மதுவை நீட்டினுள். அவன் அதை பிடிங்கி வீசிவிட்டு அவளை இழுத்து அணைத்தான். அவள் திமிறினுள்—அவன் அவளை இன்னும் இறுக அணைத்தான். அவள் புலியிடம் சிக்கிய புள்ளிமானைப் போல் தோன்றினுள். அவனிடமிருந்து எப்படியோ தன்னை விடுவித்துக் கொண்டு அவனுடைய முகத்தில் அரைந்தாள். அவன் ஏதேதோ உளரியபடி அவளை நெருங்கினுன்.

மல்லிகா அங்கிருந்த பூப்பாசியை எடுத்து அவனுடைய தலைக்குக் குறிவைத்து வீசினுள். அடிபட்ட அந்த விலங்கு அலறிக் கொண்டு தரையில் சாய்ந்தது. மல்லிகா அந்த அறையை விட்டு வெளியே ஓடினுள். அவன் அடிபட்ட தலையை தடவியபடி எழுந்தான். மல்லிகா கதவைத் தாழிட்டுவிட்டு அதன் மேல் சாய்ந்தபடி பெருமூச்சுவிட்டாள். "மிருகங்கள்......... மிருகங்கள்......... மனித மிருகங்கள்" என்று கத்தினுள். அவன், அறையின் கதவை இடிப்பது அவளுக்கு நன்ருக கேட்டது. இனி எவ்வளவு நேரம்தான் அவளால் அங்கு நிற்க முடியும். அந்த வெறிநாய் இன்னும் சில நிமிடங்களில் கதவை உடைத்துக் கொண்டு வந்துவிடும்......... பிறகு......! அவள் குரங்கின் கையில் சிக்கிய பூமாலையாக மாறி விடுவாள். இனி இந்த கேடுகெட்ட வாழ்க்கை வாழ்வதைவிட செத்து ஒழியலாம்.

அவன் உள்ளே கதவை உடைத்துக்கொண்டிருந்தான். அவள் வெளியே அந்த கதவின் மேல் சாய்ந்து கொண்டிருந்தாள். இன்னும் இரண்டொரு நிமிடங்களில் கதவு உடைபட்டுவிடும்..... அதன்பின்! மல்லிகா அதற்கு மேல் அங்கு நிற்கவில்லை. வெறிகொண்டவளைப் போல் அந்த வீட்டின் வாசல் கதவைத் திறந்துகொண்டு வெளியே ஓடினுள். அவளுடைய கமலப் பாதங்களை உடைந்த கண்ணுடித் துண்டுகள் கிழித்துக் காயப்படுத்தியதைக் கூட பார்க்காமல் ஓடினுள். ஓட ஓட அவளுடைய தலை கணத்தது, மயக்கம் வரும்போல் இருந்தது. அவள் இனி வாழ விரும்பவில்லை. அவள் வாழ்ந்துவிட்டாள்—வகை கெட்ட வாழ்வு......... இனி அவளுக்கு மரணம்தான் மன நிம்மதி கொடுக்கக் கூடியது. தலை தெறிக்க ஓடிக்கொண்டிருந்த அவளுடைய கண்கள் இருண்டன. தலைசுற்றி தரையில் விழுந்தாள். அவளை நோக்கி வேகமாக

வந்து கொண்டிருந்த 'உந்தூர்தி' (கார்) அவளருகே 'சர்ர்......' என்ற சப்தத்துடன் நின்றது. மல்லிகா சுய உணர்வை இழந்தவளாக அங்கே வீதியிலே கிடந்தாள்.

மயங்கிக் கிடந்த மல்லிகா, இமைக் கதவுகளைத் திறந்து பார்க்கும்போதுதான் ஒரு மெத்தையில் படுத்திருப்பதையும் தன்னுடைய தலையை யாரோ வாஞ்சையுடன் கோதிவிடுவதையும் உணர்ந்தாள். எழும்ப முயன்ற அவளால் உடனே எழ முடியவில்லை. தன்னுடைய தலையின் மேல் ஏதோ பெரிய சுமை இருப்பது போல் உணர்ந்தாள். சிரமப்பட்டு எழுந்து உட்கார்ந்து, தன்னுடைய தலையை பாசத்துடன் கோதிவிடும் அந்த மனிதன் யார் என்று பார்த்தாள். தாடி வளர்ந்திருந்த அவனுடைய முகத்தில் சாந்தம் தவழ்ந்தது. மல்லிகா அவனையே ஊடுறுவிப் பார்த்தாள். அவன்...... அவன்...... ஆம்! சந்தேகமே இல்லை அவனே தான். அவள் யாரை இவ்வளவு நாளாக சந்திக்கத் தேடிக் கொண்டிருந்தாளோ அதே இளங்கோ தான் அவள் முன் நின்றுகொண்டிருந்தான். ''அய்யோ நீங்களா?'' என்று அலறியவாறு எழுந்து ஓடிய மல்லிகா தாழிட்டிருந்த கதவில் முட்டிக்கொண்டு விழுந்தாள். மல்லிகாவிற்கு அவனைப் பார்ப்பதற்கே கண்கள் கூசின.

''மல்லிகா...... ஏன் ஓடுகிறாய்? நான் என்ன அவ்வளவு கொடியவனா?'' என்றான் இளங்கோ. மல்லிகா ஓடி வந்து அவனுடைய கால்களைக் கட்டிக் கொண்டு அழுதாள். விம்மி விம்மி அழுதாள். இளங்கோ அவளுடைய தோள்களைப் பிடித்து நிமிர்த்தி அவளுடைய கண்ணீரைத் துடைத்தவாறு ''மல்லிகா, அழாதே'' என்றான்.

''அத்தான்! நான் பாவி......... நான் பாவி...... களங்கமற்ற உங்களை வஞ்சித்த வஞ்சகி. என்னை மன்னித்து விடுங்கள்...... என்னை மன்னித்து விடுங்கள்'' என்று அவனுடைய மார்பில் முகம் புதைத்து அழுதாள்.

''மல்லிகா! உன்னை மன்னிக்கும் தகுதியே எனக்கு இல்லை. ஏனென்றால் தவறு செய்தவனே நான்தான்......'' என்றான் கண்ணீரை துடைத்தபடி.

"அத்தான்! அப்படிச் சொல்லாதீர்கள். தவறு செய்ததெல் லாம் நான்தான்."

"இல்லே மல்லிகா...... இல்லே! நீ தவறு செய்தவளே அல்ல. நான் தான் உனக்கு திருமணம் என்ற முறையில் துரோகம் செய்துவிட்டேன். நான் உன்னே மணந்து கொள்ளாமல் இருந் திருந்தால் நீ இன்னேரம் வேருெரு கணவனுடன் ஒரு 'குடும்ப விளக்காக'வே சுடர் வீசிக்கொண்டிருப்பாய். பாவி நான் உன் இன்ப வாழ்விற்கு படுகுழி வெட்டிவிட்டேன்" என்று அழு தான்.

"அத்தான்...... நான் உங்களிடத்திலே ஆண்மையை எதிர் பார்த்தேனே தவிர உங்களுடைய மிருதுவான உள்ளத்தை காத லிக்கத் தவறிவிட்டேன்" என்று கதறினுள்.

"மல்லிகா...... நீ என்னே ஆண்மை அற்றவனென்ரு முடிவு கட்டிவிட்டாய்......?" என்ருன் ஏக்கத்துடன்.

"அத்தான்........."

"மல்லிகா! நான் ஆண்மையற்றவனே அல்ல......"

"அப்படியென்ருல் ஏனத்தான் என்னே வெறுத்தீர்கள்?"

"மல்லிகா! நான் உன்னே வெறுத்தேனு? இல்லே மல்லிகா இல்லே. இந்த உலகில் என்னேவிட வேறு யாருமே உன்னே அதி கம் காதலித் திருக்க முடியாது. மல்லிகா......?

"சொல்லுங்களத்தான்?"

"சொல்கிறேன் கேள்...... தினமும் என் அருகில் படுத்த வாறு இன்பம் என்பதே இன்னதென்றறியாமல் பெருமூச்சு விட்டபடி ஏங்கி ஏங்கி துன்பக் கண்ணீர் வடிப்பாயே...... அதற்குக் காரணம்...... மல்லிகா நான் என் வாழ்நாளில் செய்த ஒரே தவறு. உன்னிடம் சொல்லாமல் ஒரு விஷயத்தை மறைத்து வைத்ததுதான். அன்று நான் அதை சொல்லி உன் துயரத்தை

அதிகமாக்க விரும்பவில்லை. ஆனால் அந்தத் தவறு எவ்வளவு விப ரீதங்களுக்கு மூலகாரணமாகிவிட்டது......'' என்று பெருமூச்சு விட்டான்.

''அத்தான்! ஏதேதோ பேசுகிறீர்களே எனக்கு ஒன்றுமே விளங்கவில்லையே'' என்றாள் மல்லிகா.

''மல்லிகா, நான் உன் கழுத்தில் 'தாலி' கட்டி உன்னை என் தாரமாக்கிக் கொண்ட அந்த நாள் உனக்கு ஞாபகம் இருக் கிறதா? அந்தத் திருமணத்தன்று என் பள்ளித் தோழன் பரம னும் வந்திருந்தான். அவன் ஒரு டாக்டர். தற்செயலாக அவன் என்னை சோதித்துப் பார்த்துவிட்டு அந்த பயங்கர உண்மையை தெரிவித்தான். நான் என்ன செய்வேன். திருமணம் முடிவதற்கு முன் அதை நான் தெரிந்திருந்தால் உன் வாழ்வு தடம் புறண்ட சகடமாகி இருக்காது. ஆனால், நாம் நினைப்பது போலவா எல்லாம் நடக்கிறது. மல்லிகா...... எனக்கு...... பயங்கரமான 'மேக நோய்' அப்போதுதான் ஆரம்பித்திருப்பதாக டாக்டர் பரமன் என்னிடம் தெரிவித்தான்.''

''ஆ!'' அலறினாள் மல்லிகா.

''மல்லிகா, இதை உன்னிடம் சொல்லி உன் துன்பத்தை அதிகமாக்கக் கூடாதே என்றுதான் நான் வாழாவிருந்தேன். மாசற்ற உன் தங்கத் திருமேனியை களங்கப்படுத்த நான் விரும்ப வில்லை. அதனால்தான் உன்னைவிட்டு ஒதுங்கியே வாழ்ந்து வந் தேன். என் நண்பன் பரமனும் எனக்கு இரகசியமாக சிகிட்சை அளித்து எனது மேகநோயை போக்கிவிட்டான். ஆனால் அதற் குள், தப்புக் கணக்குப் போட்டுவிட்ட நீயோ என்னைவிட்டு வெகு தூரத்திற்கு எங்கோ போய்விட்டாய்.''

''அய்யோ அத்தான் மோசம் போய்விட்டேன்! உங்களைத் தவறாகப் புரிந்து கொண்டு நாசகாரியாகிவிட்டேன்'' என்று சுவற் றில் தன்னுடைய தலையை மோதிக் கொண்டாள்.

''மல்லிகா! உன்னைத் தேடி எப்படியோ 'ஓட்டல் பேர டைசை' வந்து சேர்ந்தேன். அங்கே நீ கண்ணனுடன் வாழ்க்கை

நடத்துவதைக் கண்டு திரும்பிவிட்டேன் உங்கள் இருவரையும் வாழ்த்தியவாறு. ஆனால் மறுநாளே 'ஓட்டல் பேரடைசி'லிருந்து கீழே விழுந்து தற்கொலை செய்து கொண்டான் கண்ணன் என்று பத்திரிகையில் படித்துவிட்டு அங்கு ஓடி வந்தேன். ஆனால் உன்னை காண முடியவில்லை. எங்கெங்கெல்லாமோ தேடினேன். உன்னைக் கண்டு பிடிக்கமுடியவில்லை. பின் நம் ஊருக்கே திரும்பிச் சென்றேன். அங்கே என்னால் வாழ முடியவில்லை. ஏனென்றால்? அங்கு சதா உன் எண்ணமே என்னை வந்து வாட்டியது. இந்த ஊருக்கு வந்தேன். இங்குள்ள 'ஓவியக் கலைக் கழகத்தார்' நடத்திய ஓவியப் போட்டியில் முதல் பரிசாகிய இருபதினாயிரத்தையும் பெற்று இந்த ஊரிலேயே வாழ முயன்றேன். எனக்குக் கிடைத்த பரிசுத் தொகையைக் கொண்டு 'மல்லிகா அனாதை விடுதி' ஒன்று நிறுவினேன். அங்கே வாழ்ந்து வரும் சின்னஞ்சிறு சிறார்களுக்கு கல்வி கற்றுக் கொடுப்பதன் மூலம் உன்னை சற்று மறந்திருந்தேன். ஆனால் இன்று வீடு திரும்பும் வேளையில் நீ என் காருக்குக் குருக்கே வந்து விழுந்தாய்........." என்று கூறிய இளங்கோ, மல்லிகாவின் கன்னங்களை அன்புடன் தடவினான்.

"அத்தான்! என்னைத் தொடாதீர்கள் உங்கள் கைபடுவதற்கு அருகதையற்றவள் நான்" என்று விலகி நின்றாள் மல்லிகா.

"மல்லிகா...... நான் அன்று உன்னைக் காதலித்ததைப் போல் இன்றும் காதலிக்கிறேன். இனி நாம் வாழ்வோம், நிம்மதியாக வாழ்வோம்" என்று அவளை அணைக்க முயன்றான். அவள் அவனைவிட்டு விலகியபடி "அத்தான்! நான் நஞ்சு கலக்கப்பட்ட பால் என்னைத் தொடாதீர்கள்" என்றாள்.

"மல்லிகா! நீ களங்கப்படுத்தப்பட்டவளாக இருந்தாலும் நான் முழு மனதுடன் உன்னை ஏற்றுக்கொள்கிறேன்."

"அத்தான்! நீங்கள் தெய்வம்...... நீங்கள் தெய்வம்" என்று கதறிய அவளால் அதற்கு மேல் பேச முடியாமல் அவனுடைய பாதங்களில் விழுந்தாள். அவளை அணைத்துத் தூக்கி ஆறுதல் கூறினான் இளங்கோ.

அன்று இரவு. இளங்கோ தூக்கமின்றி துடித்துக்கொண்டிருந்தான். மல்லிகாமட்டும் இமைகளை மூடியபடி இருந்தாள்.

அவள் தூங்குகிருளா அல்லது தன்னுடைய கடந்த கால வாழ்க்கை நிகழ்ச்சிகளை மனத் திரையில் ஓடவிட்டபடி கற்பனை உலகில் நடமாடுகிருளா என்று அவனுக்கு விளங்கவில்லை. வெகு நேரம் கழித்து கண்களை மூடிய அவன் கனவுலகில் நடைபோட ஆரம்பித்தான்.

மல்லிகாவிற்கு தூக்கமே வரவில்லை. அவளுடைய மனம் குமுறும் எரிமலையாகி கொதிக்கும் குழம்புகளைக் கக்கிக் கொண்டிருந்தது. அவளுடைய உள்ளத்தில் எங்கோ ஓர் மூலையில் மறைந்து கிடந்த மனச்சான்று பெரிய குரலில் ''வஞ்சகி, வஞ்சகி'' என்று அவளைத் தூற்றியது. அவளால் நிம்மதியுடன் தூங்கவே முடியவில்லை. புறண்டு புறண்டு படுத்தாள். ஆனுல் பஞ்சனை முற்படுக்கையாக மாறியது. அவள் எழுந்து உட்கார்ந்து இளங்கோவனை நோக்கினுள். அங்கே—அவன் நிம்மதியாக தூங்கிக் கொண்டிருந்தான். களங்கமற்ற அவனுடைய முகத்திலே வடிந்த சாந்த உணர்ச்சியைக் கண்ட அவள் விம்மி விம்மி அழுதாள். சாந்தமே உருவான அந்த அன்புத் தெய்வத்திற்குத்தான் எத்தகைய மாபெரும் துரோகம் செய்துவிட்டாள் என்பதை நினைக்கும் போது அவளுடைய தலையில் ஆயிரம் தேள்கள் ஏக காலத்தில் கொட்டுவது போல் உணர்ந்தாள். தன் கணவனின் அன்பு முகத்தை மீண்டும் ஆசை பொங்க உற்று நோக்கினுள், அவனுடைய கண்களிலிருந்து வடிந்து கன்னங்களில் காய்ந்தும் காயாமலும் இருந்த அவனுடைய ஆனந்தக் கண்ணீரை தன்னுடைய கைகளால் துடைத்தாள். அவளுடைய உள்ளத்திலே மீண்டும் போராட்டம். அவனுடைய கன்னங்களில் படிந்த கண்ணீர் கறையை அவளால் துடைத்துவிட முடியும். ஆனுல்! இனி மேல் அவளால் அவனுக்கு ஏற்படப் போகும், என்றைக்குமே அழியாத அவமானத்தையும் அவச்சொல்லையும் அவளால் துடைத்தெறிய முடியுமா? என்ன இருந்தாலும் தான் ஒரு 'வீபச்சாரி' தானே என்று நினைக்கும்போது அவளுக்கு நெஞ்சமே வெடித்து விடும்போல் இருந்தது.

தன் அன்புக் கணவனை நினைக்கும்போது அவளுக்கு வேதனை அதிகமாகியது அவன் ஒரு அப்பாவி. இல்லாவிட்டால் உருக்குலைந்து சிலையான தன்னை மீண்டும் எழில் மின்னும் கலை வடிவாக்க முயற்சி செய்வானு? பாவம்! இனி அழிந்து போக வேண்

டிய தன்னை டாக்டர்களையும் மருந்துகளையும் நம்பி புது வாழ்வு அளிக்க முயலுகிறான். ஆனால் அது நடக்கக் கூடியதா? அப்படியே அவன் ஆசை நிறைவேறினாலும், டாக்டர்களால் தன் உடலைத் தான் குணப்படுத்த முடியுமே தவிர 'தமிழ் பெண்களில் ஒரே உயரிய சொத்தாகிய கற்பை' அவர்களால் திருப்பித் தர முடியுமா? என்று நினைத்து ஏங்கினாள்.

அவளால் அதற்கு மேல் பொறுக்க முடியவில்லை. எழுந்து சென்று அவசர அவசரமாக ஒரு காகிதத்தை எடுத்து எழுத ஆரம்பித்தாள்.

அன்புள்ள அத்தான்,

இப்படி அழைப்பதற்கே என் நாக்கு கூசுகிறது. அத்தான் நீங்கள் எழில் நிறை பூங்கா—நான் அதில் வசிக்கும் நச்சுப்பாம்பு. ஆம், அத்தான் நான் நச்சுப்பாம்புதான். என்னால் தீண்டப்பட்ட எத்தனை வாலிபர்கள் இன்று மருத்துவ மனைகளிலே சிகிட்சை பெற்று வருகிறார்கள் தெரியுமா?

அத்தான்! நான் பாசி படிந்த தடாகம். இதிலே நீந்த முயன்று தங்களுடைய தங்கத் திருமேனியை களங்கப்படுத்திக் கொள்ளாதீர்கள். அத்தான்! நான் சோரம் போனவள் மட்டுமல்ல மோசம் போனவளும் கூட.

கண்ணுக்கு அழகாய் தோன்றிய தூரத்துப் பச்சையை நம்பி என்னை நானே ஏமாற்றிக் கொண்டேன். அழகான சோலை என்று நான் கற்பனை செய்த அது ஒரு வறண்டுபோன பாலை வெளி. அங்கே பரிதாபப்பட யாருமில்லை. ஆனால் இரத்த வெறி பிடித்த கழுகுகளுக்குக் குறைவில்லை.

அத்தான்! உங்களை நான்கூட சரியாக புரிந்து கொள்ள வில்லை. ஆனால் 'கண்ணன்' தங்களை எப்படியோ புரிந்து கொண்டு தான் என்னை தங்களிடம் வந்து மன்னிப்புப் பெற்று புதுவாழ்வு நடத்தும்படி கூறினான். ஆனால் எல்லோரையும் போல்தான் நீங்களும் இருப்பீர்கள் என்று நினைத்து ஏமாந்தேன். அன்றே வந்திருந்தால் முழுதும் நனைந்தவளாக இல்லாமல் ஓரளவு பரி

சுத்தமானவளாகவாவது எனது வாழ்வை ஆரம்பித்திருக்க முடியும். ஆனால், அய்யோ அத்தான் தாலிகட்டிய தங்களிடம் அந்த எனது அவல வாழ்வை எப்படி சித்தரிப்பேன். வெறி நாயினும் கேடுகெட்ட சில மனித இனங்கள் என்னை மாமிசத்துண்டைவிட கேவலமாக மதித்து எனது கற்பை கெடுத்து இன்று என்னை ஒரு கேடுகெட்ட 'இரவுப் பறவை'யாக்கி விட்ட எனது 'வழுக்கி விழுந்த' வாழ்வை எப்படி விவரிப்பேன் அத்தான்.

உங்களைப் போன்ற நல்ல உள்ளம் படைத்தவர்கள் இந்த உலகில் வேறு யாருமே இருக்கமாட்டார்கள். நீங்கள் என்னை களங்கப்படுத்த விரும்பவில்லை. ஆனால் நான் என்னுடைய உடலை தூய்மையாக வைத்துக்கொள்ள முடியவில்லை. நீங்கள் கொண்டிருந்த காதல் எத்துனை பெரிது என்பதை நினைக்கும்போது எனது சிறுமை செயல்களுக்காக நான் வெட்கப்படுகிறேன்.

அத்தான்! நான் இனி உங்களுடன் வாழ விரும்பவில்லை. முன்பொருமுறை நீங்கள் என்னுடன் வாழ அருகதையற்றவர் என்ற தவறான எண்ணத்துடன் உங்களைவிட்டு வெளியேறினேன். ஆனால் இப்போதோநான் உங்களுடன் வாழ அருகதையற்றவள் என்று வெளியேறுகிறேன்.

அத்தான் நான் உங்களுக்கு தெரிந்தும் தெரியாமலும் பல தவறுகள் செய்துவிட்டேன். அதற்காக இன்று உங்களிடம் கண்ணீர் மல்க சிரம் தாழ்த்தி மன்னிப்புக் கேட்கிறேன். என்னை மன்னித்துவிடுங்கள். இமயம் நிகர் தவறுகள் செய்துவிட்ட நான்—வாழ்க்கையின் கடைசி கோட்டில் நின்று கொண்டு மன்றாடுகிறேன்—மன்னித்து விடுங்கள்.

உத்தமராகிய உங்களுக்கு மனைவியாக இருக்க நான் தகுதியற்றவள். மீண்டும் தாழ்மையுடன் கேட்டுக் கொள்கிறேன். என்னை மன்னித்து விடுங்கள். நீங்கள் என்பால் கொண்டிருந்த கரை காணாத காதலுக்காக நான் உங்களுக்குச் செய்யும் முதலும் கடைசியுமான புனிதமான தியாகம் இதுவே. உங்களுடன் வாழ ஆசைப்படுகிறேன். ஆனால் நான் இப்போது ஒரு பெண்ணல்ல... பெண்மையை எரிக்க வந்த பெரும் நெருப்பு. எந்த ஒரு நோயை காரணமாக வைத்து நீங்கள் என்னை தீண்ட மறுத்தீர்களோ

அதைவிட பயங்கரமான நோயின் காரணமாகவே நான் வெளி யேறுகிறேன். டாக்டர்களிடம் காட்டி என்னை பழைய மல்லிகா வாக உருமாற்றிவிட ஆசைப்படுகிறீர்கள். ஆனல்! அத்தான், நான் இனிமேல் புடம் போட்டு எடுக்கப்பட்ட தங்கமாக சுடர் வீச முடியாது. நான் திரிந்து போன பால். நீங்கள் என்னுடன் வாழ்ந்த அந்த குறுகிய வாழ்நாட்களை ஒரு கனவாக கருதி மறந் விடுங்கள். அத்தான், வள்ளுவர் வகுத்த வகையான 'கற்பு நெறி' யிலிருந்து தவறிய நான் இனி வாழக் கூடாது. போய் வருகிறேன் அத்தான்! போய் வருகிறேன். எங்கே? என்று மட்டும் கேட்கா தீர்கள். இது வரையில் போனவர்கள் எல்லோரும் திரும்பி வராத திவ்விய சேத்திரத்திற்குப் போகிறேன். தமிழ் பெண்களின் ஒரே ஏகபோக சொத்தாகிய கற்பையே நான் சீர்குலைத்துவிட்டேன். அத்தான்! இனி நான் ஏன் வாழவேண்டும்? தங்களுடைய தூய் மையான திருவடிகளுக்கு தொண்டு செய்யும் தகுதியற்ற அபலை,

—மல்லிகா

என்று கடிதத்தை எழுதி முடித்தாள். அவளுடைய கண் களில் இருந்து பொங்கி வடிந்த கண்ணீர்த் துளிகள் கடிதத்தில் வீழ்ந்து சிதறின. நடுங்கும் கரங்களால் கடிதத்தை மடித்து வைத்துவிட்டு இளங்கோவனிடம் வந்து நின்ருள். குமுறிவரும் அழுகையை அடக்கியவாறு அவனுடைய கன்னத்தில் ஒரு முத்த மிட்டாள். ஒரே முத்தம்! அதுவும் கடைசி முத்தம். மல்லிகா அவனுடைய பாதங்களைக் கட்டிக் கொண்டு அழுதாள். எங்கோ தொலைவில் சேவல் கூவி பொழுது புலர ஆரம்பித்துவிட்டது என்பதை பறை சாற்றியது. மல்லிகா அதற்குமேல் தாமதிக்க வில்லை. இளங்கோவனைவிட்டுப் பிரிய முடியாமல் பிரிந்து சென் ருள்.

மல்லிகா வேகமாக நடந்து கொண்டிருந்தாள். அவளுக்கு முன்னே அலை வீசி ஆர்ப்பரிக்கும் பெருங்கடல். அதிலே காலைக் கதிரோன் தன்னுடைய செங்கதிர்களை பரப்பியவாறு புறப்பட் டுக் கொண்டிருந்தான். மல்லிகா அந்த அலைகடலை நோக்கி விரைந் தாள். அவளை அணைத்துக்கொள்ளப்போகும் ஆர்வத்துடன் அலை கள் எகிறி எகிறிக் குதித்து முழக்கமிட்டன. அவள் நடந்தாள்—நடந்தாள்—சலிக்காமல் நடந்து கொண்டே இருந்தாள். எங்கே?

அலை வீசி ஆர்ப்பரிக்கும் அந்த ஆழ்கடலை நோக்கியா அல்லது அந்த முடிவில்லா கடலுக்கப்பால் முளைத்துவிட்ட ஆதவனை நோக்கியா என்று முடிவு செய்வதற்குள் முன்னேறி வந்த பெரும் அலைகள் அவளை அன்புடன் அள்ளி அணைத்து முத்தமிட்டன. அவளை அணைத்த ஆனந்தத்தில் அலைகள் கரையில் மோதி எழுப்பிய ஒலி "மல்லிகா, மல்லிகா" என்று அலறுவதைப் போல் இருந்தது. போனவர்கள் எல்லோருமே திரும்பி வராத உல்லாச பயணம்–ஆம்! முடிவான 'நெடும் பயணத்தை'த் தொடங்கி விட்டாள் '**மல்லிகா.**'

முற்றும்.



## அறிவகத்தின் இரண்டாவது போர் முழக்கம்!

சமுதாயமெனும் வெடி மருந்துச்சாலையில் காட்டப் படும் அறிவுத் தீபம்.

அவசரக்கார ஆண்களுக்கோர் அபாய அறிவிப்பு. பெண்மையை உணரா 'போலி மனிதர்களுக்கு 'சாவுமணி.' 'புது உலகம்' காண விரும்பும் மன்பதை காக்கும் இளைஞர் களுக்கோர் இன்பப் பாதை.



மெ. அறிவானந்தம் அவர்களின் பேனு முனையிலிருந்து கிளம்பிய 'எரிமலை'

# வாழ்; வாழவிடு

(நாடகம்)



அவன்! அவளுடைய வாழ்வை பாழாக்கினுன்.
கணவனையும் மனைவியையும் பிரித்து வைத்தான்.
ஆனுல் துரோக நாடகத்தின் கடைசி காட்சியில்
அவளிடம் மண்டியிட்டு மன்னிப்பு கேட்கிருன்.

அவள் மன்னித்தாளா?

படித்துப் பாருங்கள்!